பொருளடக்கம்

# படியுங்கள்! சுவையுங்கள்!

அப்துர்-ரஹீம்



# பழயுங்கள்!
# சுவையுங்கள்!!

அப்துற் - றஹீம்

வெளியீடு:
**சுலைமானியா பப்ளிஷர்ஸ்**
மஃமூர் சென்டர், முதல் மாடி,
81, அங்கப்பன் தெரு, சென்னை - 600 001
போன்: 527 0550 தபால் பெட்டி: 1886

பொருளடக்கம்



முதற்பதிப்பு : டிசம்பர் 1961
மூன்றாம் பதிப்பு : ஜூலை 1987
ஏழாம் பதிப்பு : மே 2001

**விலை ரூ. 16.00**

தஞ்சையில் எங்களின் அனைத்து நூல்களும் கிடைக்குமிடம்

காஜியார் புக் டிப்போ
முஸ்லிம் தெரு, மானம்பு சாவடி,
தஞ்சாவூர் - 613 001.
தொலைபேசி: 35529

ஒளி அச்சுக் கோர்வை:
**மாஜி கிராஃபிக்ஸ்**
சென்னை-1. போன்: 524 9905

அச்சிட்டோர்:
**மாஹின் பிரிண்டர்ஸ்,**
29, அப்பு மேஸ்திரி தெரு,
சென்னை-1. போன்: 5225143

# முன்னுரை...

வாழ்வில் நிகழும் நிகழ்ச்சிகள்
சிலவற்றைப் பார்த்துச் சிரிக்கலாம்,
சிலவற்றைப் பார்த்துச் சிந்திக்கலாம்,
சிலவற்றைப் பார்த்துச் சுவைக்கலாம்,
சிலவற்றைப் பார்த்துப் படிப்பினை பெறலாம்.
இந்நால் வகை நிகழ்ச்சிகளும் நிறைய அமைந்துள்ளன இந்நூலில். எனினும் பெரும்பாலானவை படித்து இன்புறத்தக்கன வாயிருப்பதால் நூலுக்கு 'படியுங்கள்! சுவையுங்கள்!!' என்று பெயரிட்டேன். பெயர் சரியா என்று படித்துப் பார்த்துத் தீர்ப்புக் கூறுங்கள்!

**அப்துற் - றஹீம்**

# பொருளடக்கம்



## உள்ளே...

# படியுங்கள்! சுவையுங்கள்!!

## பிள்ளையின் பதில்

ஹேவ்லக் எல்லிஸ் ஒரு நாள் பள்ளி முடிந்ததும் வீட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார். அப்பொழுது முரட்டுப் பையன் ஒருவன் அவரை வழியில் மறித்து, நையப்புடைத்துக் காயமுண்டு பண்ணி விட்டான். ஹேவ்லக் எல்லிஸ் அவனை எதிர்த்து ஓர் அடி கூட அடிக்கவில்லை. அவன் கொடுத்த அடியையெல்லாம் வாங்கிக் கொண்டு பேசாமல் வீடு வந்து சேர்ந்து விட்டார்.

தோளில் காயத்துடன் வந்த பிள்ளையைப் பார்த்ததும் பெற்ற தாய் துடி துடித்துப் போய் விட்டாள். 'யார் உன்னை இப்படி அடித்துக் காயப்படுத்தியது?' என்று படபடப்புடன் கேட்டாள். 'என் வகுப்புத் தோழன்' என்று அமைதியாகப் பதிலளித்தார் ஹேவ்லக் எல்லிஸ்.

'நீயும் திரும்பி அடித்தாயா, என்ன?'

'இல்லை அம்மா! அப்படிச் செய்தால் நானுமல்லவா அவனைப் போல் கெட்டவனாகி விடுவேன்.' பிள்ளையின் பதிலைக் கேட்டதும் அயர்ந்து போன அன்னை அடுத்த கணம் மகனை அப்படியே கட்டிக் கொண்டு விட்டாள்.

## அறிஞரும், மாணவரும்

நோபல் பரிசு பெற்ற அறிவியல் அறிஞரான சர். சி. வி. இராமன் ஒரு நாள் தம் ஆய்வுக் கூடத்திற்குள் நுழைந்தார். அப்பொழுது அங்கிருந்த அவரின் மாணவர்கள் அனைவரும் அவரை வியப்புடன் பார்த்து வணக்கம் செலுத்தினார்கள். 'ஏன் இப்படிப் பார்க்கிறார்கள்?' என்று யோசித்தார் இராமன். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. உடனே தம்முடைய படிக்கும்

அறைக்குச் சென்று அங்கிருந்த முகம் பார்க்கும் கண்ணாடியில் பார்த்தபோது தான் அவருக்கு உண்மை விளங்கியது.

அவர் முகம் ஒரு பக்கம் சவரம் செய்யப்பட்டதோடிருந்தது. ஒரு பக்கம் ஒரே சோப்பு நுரை. மாணவர்கள் ஏன் வியப்புடன் பார்க்க மாட்டார்கள் ?

## காலிபும், கழுதையும்

மிர்ஸா காலிப் அப்பொழுதுதான் இலக்கியத் துறையில் ஈடுபட்டிருந்தார். அதுதான் ஈவு, இரக்கமற்ற துறையாயிற்றே. காலிப் மிகவும் சிரமப்பட்டுத் தாம் எழுதிய முதல் நூலை வெளியிட்டு விட்டார். அது வெளிவந்தது தான் தாமதம், எங்குப் பார்த்தாலும் ஒரே எதிர்ப்பு அதற்கு. அறிவாளிகள் கூறிய குறைகளுக்கு மறுப்பளித்தார் காலிப். மற்றவர்களைப் பற்றி அவர் கவலைப்படவில்லை.

'ஏன் அவர்களுக்கும் நீங்கள் பதில் கூறக்கூடாது ?' என்று நண்பர்கள் கேட்டபோது காலிப் கூறினார், 'உங்களைக் கழுதை உதைத்தால் நீங்களும் கழுதையை உதைப்பீர்களோ ?' என்று.

## நாடக விமர்சனம்

கதையுலக மன்னர் அலெக்ஸாண்டர் டூமாஸை எழுத்தாள நண்பர் ஒருவர் தாம் எழுதிய நாடகம் ஒன்றிற்கு அழைத்துச் சென்றார். அவருக்கு டூமாஸிடமிருந்து எப்படியேனும் பாராட்டுப் பெற்று விட வேண்டுமென்னும் ஆவல். இருவரும் நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நண்பர் டூமாஸின் அருகில் நகர்ந்து, 'எப்படி இருக்கிறது நாடகம் ?' என கேட்டார். டூமாஸ் வாயைத் திறந்து பேசவில்லை, கை விரலைத்தான் சுட்டிக் காட்டினார். அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் நாடகம் பார்க்க வந்த ஒருவன் குறட்டை விட்டு உறங்கிக் கொண்டிருந்தான். நண்பருக்கு என்னவோ போல் ஆகி விட்டது.

அடுத்த நாள் அவரை டூமாஸ் தம்முடைய நாடகம் ஒன்றிற்கு அழைத்துச் சென்றார். இருவரும் சுவையோடு பார்த்துக் கொண்டிருந்தபோது திடீரென்று நண்பர், 'அதோ பார்த்தீர்களா ?' என்றார். டூமாஸ் திரும்பிப் பார்த்தார். ஒருவன் நன்கு உறங்கிக் கொண்டிருந்தான்.

'பூ! இதற்குத் தானா ? அவன் நேற்றுப் பார்த்த அதே தூங்குமூஞ்சிதான். நேற்றுப் பிடித்த உறக்கம் இன்னும் விடவில்லை அவனை' என்றார் டூமாஸ் அமைதியாக. நண்பர் வாயைத் திறக்கவில்லை.

## தொடர்நிலைக் கோட்பாடு

ஒரு மாளிகையில் நடந்த விருந்திற்கு தொடர் நிலைக் கோட்பாட்டைக் கண்டுபிடித்த ஆல்பர்ட் ஈன்ஸ்டீன் வந்திருந்தார். அப்பொழுது விருந்து வைத்த பெண்மணி அவரைப் பார்த்து, 'உங்களின் கோட்பாட்டை ஒரு சில சொற்களில் கொஞ்சம் விளக்குங்கள் !' என்று கேட்டுக் கொண்டாள்.

'கோட்பாட்டை விளக்குவதற்கு முன் உங்களுக்கு ஒரு கதை கூறுகிறேன், அதைக் கேளுங்கள் முதலில் !' என்றார் ஈன்ஸ்டீன். 'சரி' என்றாள் அவள்.

'நான் ஒரு முறை ஒரு குருடருடன் நடந்து கொண்டிருந்தேன். அப்பொழுது நான் எதையோ பற்றிப் பேசி வரும்போது, 'எனக்குப் பாலை நிரம்பப் பிடிக்கும்' என்றேன். 'பாலா, அது என்ன ?' என்று கேட்டார் அந்த அந்தகர்.

'அது ஒரு வெண்மையான திரவம்' என்றேன் நான். 'திரவம் என்றால் எனக்குத் தெரியும்; வெண்மை என்றால் என்ன ?' என்று கேட்டார் அவர். 'கொக்கு இருக்கிறதல்லவா, அதன் இறகின் நிறம்' என்றேன் நான்.

'இறகு எனக்குத் தெரியும்; கொக்கு என்றால் என்ன ?' என்று அவர் கேட்டார். 'வளைந்த கழுத்துள்ள ஒரு பறவை' என்றேன் நான்.

'கழுத்து என்றால் எனக்குத் தெரியும்; வளைந்திருப்பது என்றால்தான் எனக்கு விளங்கவில்லை' என்றார் அவர். உடனே நான் அவர் கையைப் பிடித்து நிமிர்த்தி வளைத்தேன். 'வளைந்திருப்பது என்றால் இப்படியிருப்பது தான்' என்றேன். 'விளங்கி விட்டது. பால் எப்படியிருக்குமென்பது விளங்கி விட்டது எனக்கு' என்றார் அந்த அந்தகர். அதுபோல் தான் அம்மா இருக்கும், நான் கூறுவதும், நீங்கள் புரிவதும்' என்றார் ஈன்ஸ்டீன்.

## குதிரைப் பந்தயம்

பாரஸீக மன்னர் ரஸாஷா பஹ்லவி ஒரு முறை பாரிஸுக்குச் சென்றிருந்தார். அப்பொழுது குதிரைப் பந்தயம் பாரிஸில் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. நண்பர்கள் 'குதிரைப் பந்தயம் பார்க்கலாம், வாருங்கள்!' என்று ஷாவை அழைத்தார்கள்.

ஷா சிரித்துக் கொண்டே கூறினார்: 'ஒரு குதிரை இன்னொரு குதிரையை விட வேகமாக ஓடும் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே ? அவற்றில் எந்தக் குதிரை வேகமாக ஓட வேண்டும் என்று ஏன் கவலைப்பட வேண்டும் ?'

## படக் காட்சியும், தொப்பியும்

முன்னாள் அமெரிக்கத் தொழில் துறை மந்திரியான பிரான்ஸிஸ் பெர்க்கின்ஸ் ஒரு நாள் மாலை படக் காட்சியொன்றிற்குச் சென்றிருந்தார். தமக்குப் பின்புறமாய் அமர்ந்திருப்பவர்க்குத் தம் தொப்பி மறைக்குமோ என்னும் ஐயம் ஏற்பட்டது அவருக்கு. திரும்பிப் பார்த்து 'தொப்பி மறைக்கிறதா,

கூறுங்கள்! வேண்டுமானால் நான் கழற்றி விடுகிறேன்' என்றார் அவர்.

'தயவு செய்து வேண்டாம். படத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் உங்கள் தொப்பியைப் பார்த்துக் கொண்டிருக்கலாம் போல் தோன்றுகிறது. எனக்கு படத்தை விட உங்கள் தொப்பியே வேடிக்கையாக இருக்கிறது.'

## மன்னரின் அச்சம்

ஆறாம் ஜார்ஜ் மன்னரும், பிரதம மந்திரி அட்லியும் ஒரு நாள் பக்கிங்ஹாம் அரண்மனையில் அரசியல் விஷயங்கள் பற்றி உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது தளபதி மண்ட்கோமரி பற்றிப் பேச்சு வந்தது. 'அவர் சிறந்த வீரர் தாம். ஆனால் அவர் என் பதவியைக் குறி வைத்துக் கொண்டிருக்கிறாரே என்று எண்ணித் தான் நான் வியப்படைவதுண்டு' என்றார் அட்லி.

'அப்படியா நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நல்ல வேளை. அவர் என் பதவியையல்லவா குறி வைத்துக் கொண்டிருக்கிறார் என்று அஞ்சிக் கொண்டிருந்தேன்' என்றார் மன்னர்.

## கனிவுள்ள கண்

மார்க் ட்வெய்னுக்குக் கொஞ்சம் பணம் தேவைப்பட்டது. அதற்காக அவர் ஒரு பாங்குத் தலைவரைப் பார்க்கச் சென்றிருந்தார். அந்தப் பாங்குத் தலைவருக்கு ஒரு கண் பளிங்குக் கண். பாரிஸ் நகரத்துப் புகழ் பெற்ற கலைஞர் ஒருவர் அதனைச் செய்தவராவார். தம் பளிங்குக் கண் பற்றித் தலைவருக்கு அளவற்ற பெருமை. ஏனென்றால் அது அத்துணை இயற்கையாக இருந்தது.

'ட்வெய்ன்! உமக்கு ஐயாயிரம் டாலர்தாமே வேண்டும். தருகிறேன். ஆனால் நீர் என் கண்களில் பளிங்குக் கண் எது என்று சொல்லி விட வேண்டும்' என்றார் பாங்குத் தலைவர். மார்க் ட்வெய்ன் அவர் விழிகளைக் கூர்ந்து பார்த்து விட்டுக் கூறினார், 'இடது பக்கக் கண்தான். அதில் தான் கொஞ்சமேனும் கனிவு இருக்கிறது.'

## அன்பளிப்புச் செய்த நூல்

ஒரு நாள் பெர்னாட்ஷா பழைய புத்தகங்கள் விற்கும் கடையொன்றிற்குச் சென்றிருந்தபோது அங்குத் தம் நூல் ஒன்றும் இருப்பது அறிந்து ஆச்சரியமுற்றார். அது அவரே ஒரு நண்பருக்கு அன்பளிப்புச் செய்ததாகும், 'என் வாழ்த்துக்களுடன்' என்று அவர் எழுதிக் கையெழுத்திட்டது அப்படியே இருந்தது. அதனை அப்பொழுதே விலை கொடுத்து வாங்கி அந்த நண்பருக்கே மீண்டும் அனுப்பி வைத்தார் ஷா.

மற்றொரு முறையும் அவர் அன்பளிப்புச் செய்த நூல் ஒன்று பழைய புத்தகங்கள் விற்கும் கடைக்கு வந்து விட்டது. அதனை வாங்கி முன் போல் அவருக்கே அனுப்பி வைக்க எண்ணினார் ஷா. அந்த நூலில் முதல் பக்கம் முழுவதையும் அவரே தம் கைப்பட எழுதிய அன்பளிப்புச் செய்தி நிரப்பிக் கொண்டிருந்தது. 'என்னப்பா கேட்கிறாய் இந்தப் புத்தகத்திற்கு?' என்று கேட்டார் ஷா. கடைக்காரன் வாங்கிப் புரட்டிப் பார்த்தான். 'பன்னிரண்டு ஷில்லிங்கு வரைக்கும் கூடப் போகும். எவனோ ஒரு கழுதை முன்பக்கம் முழுவதும் கிறுக்கி வைத்திருக்கிறான்...... சரி, மூன்று ஷில்லிங்குகள் கொடுங்கள்!' என்றான்.

## என்ன அவசரம்?

மார்க் ட்வெயின் குடியிருந்த வீட்டிற்கு அடுத்த வீட்டிற்குப் புதிதாக யாரோ குடி வந்தார்கள். அவர்களைச் சென்று கண்டு அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றுதான் அவரும் எண்ணிக் கொண்டிருந்தார். நேரம்தான் கிடைக்கவில்லை. வெளியே கிளம்புவதற்கு வாயிலுக்கு வந்த மார்க் ட்வெய்ன் அடுத்த வீட்டை ஏறிட்டுப் பார்த்தார். 'ஐயோ! என்ன இது?' என்று கூறி உள்ளே சென்றார்; தம் மனைவியிடம் ஏதோ சொன்னார். 'அப்படியா? போய்ச் சீக்கிரம் சொல்லுங்கள்! என்று விரட்டினாள் அவள். மார்க் ட்வெய்ன் அடுத்த வீட்டுப் படி மீதேறி மணி அடிப்பதற்கான விசையை அழுத்தினார். கதவு திறந்தது. வீட்டுக்காரர் வந்தார். சாப்பிட்டுக் கொண்டிருந்தார் போலும், கையில் கத்தியும், முள்ளுமிருந்தன. தம்மை இன்னார் என்று கூறி அறிமுகப்படுத்திக் கொண்டு மார்க் ட்வெய்ன் கூறினார்: 'பொருத்தமற்ற வேளையில் வந்ததற்கு மன்னியுங்கள், உங்களுக்கு தொந்தரவு தந்துவிட்டேன். என்றாலும் உங்களிடம் அவசியம் சொல்ல வேண்டிய விஷயம் உங்கள் வீட்டுக் கூரையில் தீ பிடித்திருக்கிறது.'

## நானும் ஒரு கனவான்தாம்!

வேல்ஸ் இளவரசரை கௌரவிக்க ஒரு விருந்து நடந்தது. இளவரசரைப் பாராட்டி ஏதேனும் பேச வேண்டுமல்லவா? ஒருவர் எழுந்தார், இளவரசர் அங்கிருப்பதை மறந்து விட்டாரோ, என்னவோ, அவர் அரச குலத்தவரை விளிக்கும் மரியாதைச் சொற்களைப் பயன்படுத்தாது 'கனவான்களே!' என்று ஆரம்பித்து விட்டார். கூறிய பிறகுதான் தாம் புரிந்த பிழை தெரிந்தது அவருக்கு, பதறிப் போய் விட்டார் அவர். 'மேன்மை தங்கிய இளவரசர் அவர்களே! தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள்!!' என்றார் பணிவாக. இளவரசர் சிரித்துக்

கொண்டே கூறினார்: 'நானும் ஒரு கனவான் தான். ஒரு கனவானாயிருப்பதிலேயே நான் அதிகம் திருப்தி அடைகிறேன்.'

## வாத்து, பாம்பு, மூடன்

ஆங்கில எழுத்தாளர் சார்லஸ் லேம்ப் ஒரு கூட்டத்தில் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார். அப்பொழுது கூட்டத்திலிருந்து ஒருவன் 'உஸ்__ஸ்___ஸ்' என்று இரையலானான். சார்லஸ் லேம்ப் 'சட்' எனப் பேச்சை நிறுத்தினார். கூட்டம் எங்கணும் ஒரே அமைதி. 'எனக்குத் தெரிந்தவரை இப்படி இரைவது மூன்றே மூன்றுதாம். வாத்து, பாம்பு, மூடன் இம்மூன்றில் தான் எந்த வகையைச் சேர்ந்தவன் என்று வந்து தெரிவித்துக் கொள்ளலாம்' என்று கூறி விட்டு லேம்ப் தம் பேச்சை விட்ட இடத்திலிருந்து துவங்கினார்.

## பாவமும், பிழையும்

ஒரு நாள் டப்ளின் நகரப் பாதிரியாரான ஹீலிடம் பாவ மன்னிப்புக் கோர ஓர் இளம் பெண் வந்தாள். இளமையின் செழுமைதானிருந்ததேயொழிய அவளிடம் துளியளவும் அழகிருக்கவில்லை. பாதிரியாருக்கு அவள் அழகைப் பற்றிய கவலை ஏன்? அவர் அவளை அன்போடு வரவேற்று, 'என்ன வேண்டும் மகளே' என்று கேட்டார். 'ஃபாதர்! நான் ஒரு பாவம் செய்து விட்டேன், தாங்கள்தாம் மன்னிப்புப் பெற்றுத் தரவேண்டும்' என்று கெஞ்சினாள் அவள். 'என்ன பாவம் செய்தாய்?' என்று கேட்டார் பாதிரியார். 'எனக்குக் கர்வம் ஏற்பட்டு விட்டது! கர்வம் கொள்ளுவது பாவமில்லையா!'

'பாவம்தான், எப்படி ஏற்பட்டது உனக்கு?' என்றார் பாதிரியார். 'ஒவ்வொரு நாள் காலையிலும் நான் கண்ணாடியில் பார்ப்பது வழக்கம். அப்படிப் பார்க்கும் போதெல்லாம் 'நாம்

எத்துணை அழகாக இருக்கிறோம்!' என்னும் எண்ணம் தோன்றி விடுகிறது ஃபாதர்.' 'அப்படியா?' அதிர்ந்தவராய்க் கேட்டார் பாதிரியார். 'அவ்வாறாயின் அது ஒரு பாவமல்ல, பிழைதான்.'

## நண்பரின் கேள்வியும், ஜாமியின் பதிலும்

பாரஸீக மொழியில் அழியாப் புகழ் பெற்ற காவியங்களை எழுதியவர் மௌலானா ஜாமி. அவரிடம் ஒரு வழக்கமிருந்து வந்தது. அதாவது அவர் வீட்டிற்குள் நுழைந்ததும் கதவை மூடித் தாழிட்டுக் கொள்வார். வெளிவரும் போது இரண்டு கதவுகளையும் நன்றாகத் திறந்து போட்டு விடுவார்! அவர் இவ்விதம் செய்வதன் காரணம் ஒருவருக்கும் புரியவில்லை. ஒரு நாள் நண்பரொருவர் கேட்டார், 'என்ன இப்படிச் செய்கிறீர்கள்? எல்லோரும் வீட்டிற்குள்ளிருக்கும் போது கதவைத் திறந்து வைத்திருப்பார்கள்; வெளியே செல்லும்போது கதவுகளை மூடி விட்டுச் செல்வார்கள். தாங்கள் செய்வது அதற்கு நேர் மாற்றமாக இருக்கிறதே?' என்று.

ஜாமி பதில் சொன்னார், 'வீட்டிற்குள்ளிருக்கும்போது அதற்குள்ளிருக்கும் மிக விலையுயர்ந்த பொருள் நான் தான். அதனால் கதவை மூடிக் கொள்ளுகிறேன். வெளியே செல்லும்போது வீட்டிற்குள்ளிருக்கும் மற்ற பொருள்களைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை. ஏனெனில் அவையெல்லாம் அத்துணை மதிப்புடையவையல்ல. அதனால் தான் நான் கதவுகளைத் திறந்து போட்டு விடுகிறேன்.'

## தாடியின் பயன்

ஜார்ஜ் பெர்னாட்ஷா தாம் இறக்கும் வரையில் தாடி வைத்திருந்தார். 'எதற்காக அவர் தாடி வைத்துக் கொண்டிருக்கிறார்?' என்ற ஓர் ஐயம் ஏற்பட்டது பத்திரிகை நிருபர் ஒருவருக்கு.

ஒரு நாள் அந்த நிருபர் ஷாவை அணுகி, 'எதற்காகத் தாங்கள் தாடி வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? தாடி வைத்துக் கொண்டிருப்பதால் இலாபம் உண்டு என்று தாங்கள் எண்ணுகிறீர்களா?' என்று கேட்டார். 'சந்தேகமில்லாமல்' என்றார் ஷா. 'எப்படி?' என்று கேட்டார் நிருபர்.

'இளைஞரே! நான் சவரம் பண்ணிக் கொள்வதற்காகச் செலவிட்டிருக்க வேண்டிய நேரத்தில் நிச்சயமாக ஒரு நாடகமேனும் எழுதியிருப்பேன். இல்லையா?'

## பிரிட்டானியப் பேரரசு

ஆங்கிலேயன் ஒருவன் அமெரிக்காவுக்கு வந்தான். வந்தவன் வட அமெரிக்காவைச் சேர்ந்த இந்தியன் ஒருவனிடம் பிரிட்டானியப் பேரரசின் பெருமைகளையெல்லாம் அள்ளி விடலானான். 'உனக்குத் தெரியுமோ, இல்லையோ, பிரிட்டானியப் பேரரசிலே கதிரவனே அடைவதில்லை' என்று இந்தியனைப் பார்த்துக் கேட்டான் அவன். இந்தியன் விழித்தான். 'எப்படி இதுவென்று உனக்குப் புரிகிறதா?'

'புரிகிறது' என்று கூறி ஆங்கிலேயனைப் பார்த்து அந்த இந்தியன் கேட்டான், 'ஏன், இருட்டில் வைத்துக் கடவுள் பிரிட்டிஷ் காரர்களை நம்பவில்லையோ?' என்று.

## கடவுள் எங்கே இருக்கிறார்?

இந்தியாவின் புகழ் மிக்க நீதிபதிகளுள் ஒருவராயிருந்த மஹ்மூதுக்கு அப்பொழுது பத்து வயதிருக்கும். அப்பொழுது அவருக்கு ஒரு சந்தேகம் வந்தது. கடவுள் என்று சொல்கிறார்களே, அவர் எங்கிருக்கிறார் என்று. தமக்கு ஏற்படும் எந்தச் சந்தேகத்தையும் அவர் தம் தந்தையாரிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளுதல் வழக்கம்.

வெளியில் சென்று விட்டு சர். ஸையித் வீட்டுப் படிகளில் தாம் ஏறினார். 'அப்பா' என்று கத்திக் கொண்டே ஓடினார் மஹ்மூத். 'அப்பா! கடவுள் எங்கே இருக்கிறார், அப்பா?' என்று கேட்டு விட்டுத் தந்தையின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார் மஹ்மூத். 'எங்கிருந்தால் யாரும் கண்டு கொள்ள முடியாதோ அங்கு' என்று கூறி விட்டு நடந்து கொண்டேயிருந்தார் சர். ஸையித் அஹ்மத் கான்.

## யார் அந்த இளைஞர்?

விக்டோரியா மகாராணியின் ஆட்சி காலத்தில் இங்கிலாந்தின் பிரதம மந்திரியாகயிருந்த சேலிஸ் பிரபு ஒரு விருந்தில் கலந்து கொண்டார். அந்த விருந்திற்கு வந்திருந்த ஓர் இளைஞனை அவருக்கு நிரம்பப் பிடித்து விட்டது. அவனை யார் என்று தெரிந்து கொள்ள விரும்பினார் அவர்.

அருகிருந்தவரை அழைத்து, 'அதோ நிற்கிறானே அந்த இளைஞனைப் பார்த்தீர்களா? எத்துணை அழகாக இருக்கிறான். யார் அவன்? அவனை எங்கோ பார்த்ததாகக் கூட நினைவிருக்கிறது' என்று கூறினார். அந்த மனிதர் தமக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, 'அவன் உங்கள் 'செக்ரடரி' தானே' என்றார்.

## மனைவியின் மாதிரி

ஐரிஷ் கோடிச் செல்வரான தாமஸ் லிப்டனுக்கு ஆப்பிரிக்கக் காடுகளில் வேட்டையாடிக் கொண்டு திரிந்த அவர் நண்பரிடமிருந்து ஒரு தந்தி வந்தது. அதில் அவர், 'ஆப்பிரிக்க மக்களிடையில் உங்கள் தேயிலைக்கு அதிகம் கிராக்கி, உண்மையாகச் சொல்லுகிறேன். ஆறு பவுண்ட் லிப்டன் தேயிலைக்கு மூன்று மனைவியரை விலைக்கு வாங்கி விடலாம் இங்கு. ஒரு முறை தாங்கள் இங்கு ஏன் வந்து போகக் கூடாது?'

உடனே லிப்டன் ஆப்பிரிக்க மக்களிடையே விநியோகிப்பதற்காகச் சில மாதிரிப் பொட்டலங்களை அனுப்பச் சொல்லி விட்டு பின்வரும் தந்தி கொடுத்தார்: 'தேயிலை மாதிரி நான் அனுப்பி வைத்து விட்டேன். மனைவியர் மாதிரி உடனே நீங்கள் அனுப்பி வைக்க வேண்டியது.'

## ஷவ்கத் அலீயின் பருத்த உடம்பு

கிலாபத் இயக்கம் நடந்து கொண்டிருந்த நேரம், அரசாங்கத்திற்கு விரோதமான சொற்பொழிவு செய்து விட்டு அப்பொழுதுதான் வீட்டிற்கு வந்திருந்தார் ஷவ்கத் அலீ. அவரைத் தொடர்ந்து ஒரு போலீஸ் அதிகாரி வந்தார். 'உங்களைப் பிடிக்க 'வாரண்டு' டன் வந்திருக்கிறேன். தயாராகுங்கள்!' என்றார்.

'கொஞ்சம் பொறுங்கள். இதோ வந்து விடுகிறேன்' என்று கூறிக் கொண்டே உள்ளே போகப் போன ஷவ்கத் அலீ போலீஸ் அதிகாரியைத் திரும்பிப் பார்த்துச் சொன்னார், 'பயந்து விடாதீர்கள். இந்தப் பெருத்த உடம்பைத் தூக்கிக் கொண்டு நான் எங்கே ஓடி விடப் போகிறேன்?' என்று.

## கல்லும் சொல்லும்

அப்பாஸிய கலீபா ஹாரூன் அல் ரஷீத் அவைக்கு வந்ததும் பிரதானிகள் அனைவரும் அவருக்கு மரியாதை செய்வதற்காக எழுந்து நின்றார்கள். அல் ரஷீத் தம் பின் வந்த ஊழியன் கொண்டு வந்த பையிலிருந்து ஒவ்வொரு வைரக் கல்லாக எடுத்து பிரதானிகள் ஒவ்வொருவருக்கும் கொடுத்துக் கொண்டே வந்தார். 'எதற்காகத் தருகிறார் கலீபா?' என்று எவர்க்கும் தெரியவில்லை. கலீபாவும் கூறவில்லை. வைரக் கற்கள் எல்லோருக்கும் கொடுத்தாகி விட்டது. 'இதனை என்ன செய்யட்டும்?' என்று வினவுகிறார்போல் பிரதானிகள் அனைவரும் கலீபாவை ஏறிட்டுப் பார்த்தார்கள். 'உங்கள்

கைகளிலுள்ள வைரக் கற்களை ஓங்கி அடித்து உடைத்தெறியுங்கள்!' என்றார் கலீபா.

ஆணை பிறந்த அடுத்த கணம் 'சடார்' என்னும் ஒலி கேட்டது. ஓங்கி அடித்து உடைத்தவர் அபூ நவாஸ் ஒருவர்தாம். மற்றவர்கள் எல்லோரும், 'இவ்வளவு விலை மதிப்புள்ள கல்லை எப்படி உடைப்பது?' என்று திகைத்து போய் நின்றார்கள். கலீபா அபூ நவாஸைப் பார்த்தார்; 'எல்லோரும் உடைக்காதிருக்க நீர் மட்டும் ஏன் உடைத்தீர்?' என்று கேட்டார்! 'கலீபா அவர்களின் சொல்லை உடைப்பதை விடக் கல்லை உடைப்பது மேல் என்று கருதித்தான்' என்றார் நகைச்சுவை மன்னரான அபூ நவாஸ்.

## வழங்கும் கை

ஒரு விருந்து விழாவில் இரு இள நங்கையர் அழகான கைகளின் தன்மையைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். விவாதம் அவ்விருவர் கைகளில் எவர் கை அதிக அழகுடையது என்பதில் வந்து முடிந்தது. அருகில் அமர்ந்திருந்த பெஞ்சமின் பிராங்க்ளினைத் தீர்ப்பளிக்கும் படிக் கேட்டுக் கொண்டார்கள் அவர்கள். சங்கடமான வேலை அது என்பதைக் கணத்தில் புரிந்து கொண்டு விட்டார் அவர். சங்கில் கடைந்தெடுத்து ரோஜா மலரின் மென்மையும் இளஞ் சிவப்பு வண்ணமும் ஏற்றப்பட்டாற்போல் இலங்கிய இரு ஜோடிக் கரங்கள் அவர்முன் நீண்டு நின்றன. பெஞ்சமின் பிராங்க்ளின் யோசித்தார். 'இருவர் மனமும் புண்படக் கூடாது; அதே வேளையில் நாம் கூறும் தீர்ப்பு உண்மையாகவும் இருக்க வேண்டும். என்ன செய்யலாம்?' சிந்தித்தார் அவர்.

எழில் நங்கையரின் இணை கரங்களில் ஒவ்வொன்றைப் பிடித்துக் கொண்டு அவற்றின் அழகை அளப்பது போல் பார்த்தார் அவர். 'இரண்டு பேரின் கைகளும் அழகாகத் தான் இருக்கின்றன' என்றார். 'அதில் எது அதிக அழகு? அதைக்

கூறுங்கள் !' என்றனர் நங்கையர் இருவரும். 'உண்மையில் கஷ்டமான கேள்விதான் இது. ஓர் ஏழையைப் பிடித்து நீங்கள் இந்தக் கேள்வியைக் கேட்பீர்களேயாயின் அவன் ஒரு கணம் கூடத் தயங்காமல் உடனே கூறுவான், 'உலகிலே மிகவும் அழகான கை வழங்கும் கைதான்' என்று.' அமைதியாகக் கூறி விட்டு கைகளை விட்டார் பெஞ்சமின் பிராங்க்ளின்.

## கனவான்கள் இல்லையா?

இங்கிலாந்தின் பார்லிமெண்டில் பேசுவதற்காகத் தொழிற் கட்சி அங்கத்தினரான மேக்ஸ்டன் எழுந்தார். பார்லிமெண்டில் அங்கத்தினர்களை விளித்துப் பேசக் கூடாது. சபாநாயகரை விளித்துத் தான் பேச வேண்டும். எந்தக் காரியமும் சபா நாயகர் மூலமாகத்தான் நடக்க வேண்டும். இந்த விதியை மறந்து விட்டாரோ என்னவோ மேக்ஸ்டன், 'கனவான்களே!' என்று ஆரம்பித்தார். உடனே சபா நாயகர் அவரை மேலும் பேசாமல் தடுத்து விஷயத்தைக் கூறினார்.

மேக்ஸ்டன் சபா நாயகரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அங்கத்தினர்களைப் பார்த்துக் கூறினார்: 'கண்ணியமிக்க உறுப்பினர்களே! உங்களையெல்லாம் 'கனவான்களே' என்று அழைத்ததற்காக நான் மிக மிக வருந்துகிறேன்.'

## இரண்டு டிக்கட்டுகள்

ஒரு முறை காசி பல்கலைக்கழகத்தை நிறுவிய பண்டித மதன் மோகன் மாளவியா ஓர் ஊருக்குப் புறப்பட்டார். வண்டி புறப்படவிருந்ததால் அவரால் டிக்கட் வாங்கிக் கொள்ள இயலவில்லை. டிக்கட் வாங்காமலே வண்டியில் ஏறிக் கொண்டு விட்டார்.

மற்றொரு முறை அதே ஊருக்குப் போக நேர்ந்தபோது இரண்டு டிக்கட்டுகள் வாங்கி ஒன்றைக் கிழித்துப் போட்டு விட்டு மற்றொன்றைப் பத்திரமாக வைத்துக் கொண்டார் பண்டித மாளவியா.

## அதிக ஆற்றல் உள்ளவன்

அரசியல் அறிஞரும், அரிமாவன்ன வீரருமான தெமிஸ்டாகில்ஸ் ஒரு நாள் தம் புதல்வனைப் பார்த்துக் கூறினார்: 'நீ தானடா கிரீஸ் முழுவதிலும் அதிக ஆற்றலுள்ளவனாயிருக்கிறாய்' என்று. 'எப்படியப்பா ?' என்று கேட்டான் பையன்.

தந்தையார் சொன்னார்: 'கிரீஸ் முழுவதையும் அதீனியர் ஆளுகிறார்கள். நான் அதீனியர்களை ஆளுகிறேன். உன் அன்னை என்னை ஆளுகிறாள். அவளை நீ ஆட்டிப் படைக்கிறாய்.'

## மதுக்கடையில் ரஸ்ஸல் மெலோனி

ரஸ்ஸல் மெலோனி என்பவர் ஒரு சிறந்த எழுத்தாளர். அவரை டெலிவிஷனில் தோன்றிப் பேசுமாறு கேட்டுக் கொண்டனர் ஒரு டெலிவிஷன் கம்பெனிக்காரர்கள். அவரும் அதற்கு ஒப்புக் கொண்டு அதற்கான பத்திரத்திலும் கையெழுத்திட்டார். இந்தச் செய்தியை அவர் தம் மனைவியிடம் கூறி, 'இனிமேல் பார்! நியூயார்க்கிலுள்ள ஒவ்வொரு மதுக்கடையிலும் நான் காணப்படுவேன்' என்றார்.

'இப்பொழுது மட்டும் என்னவாம்? அங்கேயெல்லாம் நீங்கள் காணப்படவில்லை என்று யார் சொன்னார்களாம்' என்றாள் அவள்.

## மாமியாரும், மருமகனும்

ஒரு நாள் சர்.சி.வி. இராமனுக்கு அவரின் மாமியாரிடமிருந்து ஒரு தந்தி வந்தது. அன்றிரவு தாம் அங்குப் புறப்பட்டு வருவதாகவும், ஸ்டேஷனில் தம்மைக் காலையில் சந்திக்குமாறும் கேட்டுக் கொண்டிருந்தார் அவர். அதன்படியே மாமியாரை அழைத்து வருவதற்காக இராமன் விடிந்ததும் ஸ்டேஷனுக்குத் தம் காரில் புறப்பட்டார். அவர் வந்து சேர்ந்த பதினைந்து நிமிடங்களுக்கெல்லாம் வண்டி வந்து நின்றது. இராமனுக்கு எதிரேயிருந்த பெட்டியிலிருந்து அவரின் பழைய நண்பர் தம் பெட்டி, படுக்கைகளுடன் இறங்கினார். பழைய நாள் நண்பரைப் பார்த்த இராமனுக்கு எல்லாமே மறந்து போய் விட்டது.

நண்பரைத் தம் காரில் ஏற்றி வைத்துக் கொண்டு வீட்டிற்குக் கிளம்பி விட்டார். வீடு வந்து சேர்ந்த அரை மணி நேரத்திற்கும் அதிகமான பிறகுதான், 'நாம் எதற்காக ஸ்டேஷனுக்குச் சென்றோம்?' என்னும் நினைவு வந்தது அவருக்கு. உடனே காரை எடுத்துக் கொண்டு ஸ்டேஷனுக்கு விரைந்தார் இராமன். பாவம்! அவரின் மாமியார் மருமகப் பிள்ளையைக் காணாமல் தவித்துக் கொண்டிருந்தார் ஸ்டேஷனில்.

## நீண்ட கடிதம்

ஜார்ஜ் பெர்னாட்ஷா தாம் எழுதும் எதனையும் மிகவும் கவனமாய்த் திருத்துவார், சுருக்குவார். அளவுக்கதிகமாய் ஒரு சொல் கூட இருக்கக் கூடாது என்பது அவர் கருத்து.

அவர் ஒரு முறை நாடக மன்றங்களின் கழகமொன்றிற்கு எழுதிய கடிதம் சற்று நீண்டு விட்டது என்று தோன்றியது அவருக்கு. கடிதத்தில் ஷா குறிப்பிட்டார்: 'இந்தக் கடிதம் அளவுக்கதிகமாய் நீண்டு விட்டதற்கு மன்னிக்கவும். என்ன செய்வது, குறுகிய கடிதம் எழுத எனக்கு நேரமில்லை.'

## ஸ்டாலினின் சாமர்த்தியம்

இரண்டாம் உலகப் பெரும் போர் நடந்து கொண்டிருக்கும்போது போர் நிலைமை பற்றி ஆலோசிப்பதற்காக முப்பெரும் தலைவர்களான ரூஸ்வெல்ட், சர்ச்சில், ஸ்டாலின் மூவரும் சந்தித்தார்கள். அவர்கள் முக்கியமான விஷயங்களைப் பற்றியெல்லாம் பேசி முடித்தபின் வேடிக்கையாகப் பேசத் துவங்கினார்கள்.

சர்ச்சில் சொன்னார்: 'நான் ஓர் இங்கிலீஷ்காரனா யில்லாவிட்டால் ஓர் அமெரிக்கனாகவே இருக்க விரும்புவேன்.' உடனே ரூஸ்வெல்ட், 'நான் ஓர் அமெரிக்கனாக இல்லாவிட்டால் ஓர் இங்கிலீஷ்காரனாகவே இருப்பேன்' என்று கூறினார். இவர்கள் கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்டாலின் அமைதியாக, 'நான் ஒரு ரஷ்யனாயில்லாவிட்டால் அதற்காக வெட்கப்படுவேன்' என்றார்.

## மீசையும், அரசியலும்

சர்ச்சில் அப்பொழுது ஓர் இளைஞர், மீசை வளர்த்துக் கொண்டிருந்தார் அவர். ஒரு நாள் ஓர் இளநங்கை அவரைப் பார்த்து, 'உங்கள் மீசை எனக்கு நிரம்பப் பிடித்திருக்கிறது. ஆனால் உங்களின் அரசியல்தான் எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை' என்றாள்.

சர்ச்சிலின் கண்கள் சுடர் விட்டன. இதழ்களில் ஏளன நகை நெளிந்தது. 'அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம் அம்மணி; இரண்டுடனும் உங்களுக்குத் தொடர்பு இருக்கப் போவதில்லை' என்று அவர் சொன்னதும் அந்த இள நங்கை நாணத்தால் தலை குனிந்தாள்.

## தலைவலி மருந்து

ஒரு நாள் மாலை பெர்னார்ட்ஷாவுக்குக் கடுமையான தலைவலி. அவரும் என்னென்னவோ செய்து பார்த்தார். தலைவலி நிற்கவில்லை. அந்தச் சமயம் பார்த்து ஆர்க்ட்டிக் பிராந்தியத்தில் பிரயாணம் செய்து திரும்பிய நான்ஸன் அவரைப் பார்க்க வந்தார்.

பெர்னார்ட்ஷா அவரைப் பார்த்து, 'நீங்கள் தலைவலிக்கு ஏதேனும் மருந்து கண்டுபிடித்திருக்கிறீர்களா ?' என்று கேட்டார். நான்ஸனுக்கு ஒரே வியப்பு. 'என்ன நம்மிடம் வந்து இந்தக் கேள்வியைக் கேட்கிறார்' என்று. 'இல்லை' என்றார் அமைதியாக. 'தலைவலிக்கு ஒரு மருந்து கண்டுபிடிக்க நீங்கள் என்றுமே முயன்றதில்லையா ?' என பெர்னார்ட்ஷா வினவ, 'இல்லை' என்றார் நான்ஸன்.

'ஆச்சரியமாய்த்தானிருக்கிறது' என்று சொல்லிவிட்டு நான்ஸனை ஏறிட்டுப் பார்த்தார் ஷா. 'நீங்கள் உங்கள் வாழ்க்கையையே வடதுருவத்தைக் கண்டுபிடிப்பதில் செலவிட்டி ருக்கிறீர்கள். ஆனால் எவரும் வட துருவத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால் உயிர் வாழும் ஒவ்வொரு மனிதனும் தலைவலிக்கு ஒரு மருந்து கிடைக்காதா என்று அலறிக் கொண்டிருக்கிறான். அதைத்தான் நீங்கள் கண்டுபிடிக்க என்றுமே முயன்றதில்லை என்கிறீர்கள்.'

## பளபளப்பான மிதியடி

ஒரு ரோமானியனுக்கும், அவன் மனைவிக்கும் தீராச் சண்டை. இருவரும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார்கள். இறுதியில் மண விடுதலை செய்து கொள்ளுவதெனத் தீர்மானித்து செய்தும் கொண்டு விட்டார்கள். அந்த

ரோமானியன் இப்படிச் செய்தது அவன் நண்பர்களுக்குப் பிடிக்கவில்லை. 'குடும்பம் என்றால் சண்டை சச்சரவுகள் இருக்கத்தான் செய்யும். அதற்காக அவளை நீ மணவிலக்குச் செய்திருக்கக் கூடாது' என்று குறை கூறினார்கள்.

'அவள் என்ன, அழகாக இல்லையா?' என்று ஒருவன் கேட்டான். 'அவளின் கற்புக்கு என்ன குறைச்சலாம்?' என்று இன்னொருவன் கூறினான். அந்த ரோமானியனுக்குப் பொறுக்கவில்லை. தன் சப்பாத்துக்களைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டான்.

'என்னப்பா நீ இதற்காகப் போய் சப்பாத்தைத் தூக்குகிறாய்?' என்று ஒருவன் சொல்ல, 'அதற்காக இல்லை' என்று கூறி விட்டு அவன் கேட்டான், 'இந்தச் சப்பாத்து பளபளப்பாக இல்லையா, நன்றாகச் செய்யப்பட்டில்லையா? அப்படியிருந்தும் அது என் காலில் எங்குக் கடித்தது என்று உங்களுள் எவராலும் கூற முடியுமா?' என்று. அவர்கள் எப்படி பதில் சொல்வார்கள்? 'இதுபோலத்தான் என் மனைவியின் குறை எனக்குத்தான் தெரியும், ஹூம்!' என்றான் அந்த ரோமானியன்.

## கசையடி

பக்தீரீயாவின் கவர்னராயிருந்த இப்ராஹீமுக்கு இன்ப சுகங்களில் ஈடுபாடு அதிகம். அவரின் படுக்கை மிகவும் மென்மையாக இருக்கும். அதனை விரிப்பதற்குப் பணிப் பெண் ஒருத்தியை நியமித்திருந்தார் இப்ராஹீம். அந்தப் பணிப் பெண்ணுக்கு ஓர் ஆசை. 'நாள்தோறும் விரிக்கிறோமே மென் மஞ்சம், இதில் நாமும் கொஞ்ச நேரம் படுத்துக் கிடக்க வேண்டும்' என்பது தான் அந்த ஆசை. ஆசையை அச்சம் இத்தனை நாட்களாய்த் தடுத்து வந்தது. அன்று துணிந்து விட்டாள் அவள். மென் மஞ்சத்தில் ஏறிப் படுத்தவள் தான் அதன் சுகத்தில் அப்படியே தூங்கிப் போய் விட்டாள்.

இப்ராஹீம் வந்தார்; பார்த்தார். 'என் படுக்கையில் படுக்க எத்துணைத் துணிச்சல் வேண்டும்?', ஆத்திரத்தால் அதிர்ந்தது அவர் உடல், கண்களிரண்டும் சிவந்து போய் விட்டன. 'யார் அங்கே? இவளுக்கு இப்பொழுதே இருபத்தைந்து கசையடிகள் கொடுங்கள்!' என்று ஆணையிட்டார். பணிப் பெண் நடுங்கிப் போய் நின்றாள். 'என்ன துணிச்சல் உனக்கு?' அவர் வினவ,

'எஜமானே! கொஞ்ச நேரம் படுத்திருந்ததற்கே இருபத்தைந்து கசையடிகள் கொடுக்கக் கட்டளையிட்டு விட்டீர்கள். நீங்கள் ஒவ்வொரு நாளும் அதில் எவ்வளவு நேரம் தூங்குகிறீர்கள்? ஆண்டவன் உங்களுக்கு எத்தனை கசையடி கொடுக்கக் கட்டளையிடப் போகிறானோ? அதை நினைத்தால்தான் எனக்கு வருத்தமாயிருக்கிறது.' இப்ராஹீம் அவளை மன்னித்ததுடன் சிந்திக்கவும் துவங்கினார்.

## மதப் பரிசோதனை

பத்திரிகை ஆசிரியர் ஹோரேஸ் கிரீலிக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் எழுதப்பட்டிருந்தது இதுதான்; 'அன்புள்ள கிரீலி! எங்கள் மாதா கோயிலின் பொருளாதார நிலை நிரம்ப மோசமாயிருக்கிறது. அதைச் சரிகட்டுவதற்கு நாங்களும் என்னென்னவெல்லாமோ செய்து பார்த்து விட்டோம். சந்தைகள் என்ன, விழாக்கள் என்ன, விருந்துகள் என்ன, போலி மண விழாக்கள் என்ன, ஒன்றையும் பாக்கி வைக்கவில்லை. ஆனால் எதுவும் பயனளிக்க மாட்டேன் என்கிறது. எங்கள் கோயில் நிலைமை சீரடைவதற்கு என்ன செய்து பார்க்கலாம், சொல்லுங்கள்!'

கிரீலி உடனே பதில் எழுதினார், 'மதத்தைச் சோதித்துப் பார்த்தால் என்ன?' என்று.

## முதிர்ந்த குழந்தை

மொகலாயப் பேரரசர் அக்பரின் அமைச்சர்களுள் ஒருவர் அப்துற் றஹீம் கானே கானம் என்பவர். அவர் மிகவும் அழகானவரா யிருந்ததால் பெண்கள் பலர் அவரை மணக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்தனர்.

அவர்களுள் ஒருத்தி அவரை ஒரு நாள் அணுகி, 'உங்களைப் போல ஒரு குழந்தை எனக்கு இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்'' என்றாள்.

உடனே அப்துற் - றஹீம் பதில் அளித்தார்: 'தாயே! இவ்வளவு முதிர்ந்த குழந்தையான என்னை உங்களுக்கு அளித்த இறைவனைப் புகழுங்கள்' என்று.

## திருமணப் பரிசு

நோபல் பரிசுத் திட்டத்தை நிறுவிய ஆல்பிரட் நோபலுக்குத் தம் பணிப் பெண்களுள் ஒருத்தி மீது மட்டும் தனிப் பிரியம். அவள் ஒரு நாள் நோபலிடம் தனக்குத் திருமணம் விரைவில் நடக்கப் போவதாய்த் தெரிவித்தாள். 'உனக்கு என்ன அன்பளிப்புச் செய்ய வேண்டும், சொல்' என்றார் நோபல் அவளைப் பார்த்து.

அவள் எதுவும் கூறாது நின்றாள். ஆனால் எதையோ கூற விரும்புவது போலவும் அதைச் சொல்லத் தயங்குவது போலவும் தோன்றியது. 'சும்மா சொல்!' என்றார் நோபல். 'உங்களின் ஒரு நாளைய வருமானம்' என்றாள் அவள். அவள் கேட்டபடியே தம்முடைய ஒரு நாள் வருமானமான ஏழாயிரம் டாலரை எண்ணிக் கொடுத்தார் ஆல்பிரட் நோபல்.

## இலஞ்சம் வேண்டாம்

கமால் அத்தா துர்க்கிற்குப் பிறகு துருக்கியின் ஜனாதிபதியாக வந்தவர் இஸ்மத் இனோனு. அவர் மிகவும் நேர்மையானவர். அதற்கு ஓர் உதாரணம் இது: இஸ்மத் இனோனு ஒரு ஜெர்மன் கம்பெனியிடம் தமக்கு ஒரு வீடு கட்டித் தருமாறு கேட்டுக் கொண்டார். அதன்படி அவர்களும் கட்டிக் கொடுத்தார்கள்.

அவரிடம் 'பில்' வந்தது; பார்த்தார். உடனே அந்தக் கம்பெனி நிர்வாகியை வரவழைத்தார். 'கணக்கைக் கொஞ்சம் சரியாகப் பார்த்துப் போடுங்கள்! நீங்கள் எனக்கு இலஞ்சம் தர முயலுவதாய்த் தெரிகிறது' என்றார். நிர்வாகி 'இல்லை, இல்லை' என்று முணுமுணுத்தார்.

## அறிஞரின் மலைப்பு

வெள்ளைக்காரர்களே பிராணிகள் வளர்ப்பதில் பிரியம் உள்ளவர்கள். அதற்கு அறிவியல் அறிஞர் ஐசக் நியூட்டன் கூட விதிவிலக்கல்ல. அவர் இரண்டு பூனைகளை வளர்த்து வந்தார். அவற்றில் ஒன்று சிறியது. மற்றொன்று பெரியது.

ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும்போது எவரும் வந்து தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பதற்காக ஆய்வுக் கூடக் கதவை மூடி விடுவது அவர் வழக்கம். ஆனால் அவ்வாறு அவர் தம் அருமைப் பூனைகளையும் தடுத்து விட விரும்பவில்லை. எனவே அவர் கதவில் இரண்டு துளைகள் போட்டு வைத்திருந்தார். அவற்றுள் ஒன்று பெரியது, மற்றொன்று சிறியது. அன்று அவரைக் காண வந்த நண்பருக்கு 'ஏன் கதவில் இரண்டு துளைகள் இடப்பட்டிருக்கின்றன' என்று விளங்கவில்லை.

ஐசக் நியூட்டனைப் பார்த்ததும் அவர் கேட்ட முதல் கேள்வி, 'ஏன் கதவில் இரு துளைகள் இடப்பட்டிருக்கின்றன ?' என்பது

தான். 'இது தெரியவில்லையா உங்களுக்கு? என் பெரிய பூனை வருவதற்குப் பெரிய துளை, என் சிறிய பூனை வருவதற்குச் சிறிய துளை' என்றார் நியூட்டன் நண்பரைப் பார்த்து.

'ஏன் பெரிய துளை வழியே சிறிய பூனை வரக் கூடாதோ?' என்று கேட்டபோது தான் அந்த அறிவியல் அறிஞருக்குத் தாம் செய்த தவறு புரிந்தது.

## பிள்ளையின் திறமை

ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் சிக்கனத்திற்கும், கண்டிப்பிற்கும் பேர் போனவர். தம்மைப் போலவே பிள்ளையும் இருக்க வேண்டுமென்று எதிர்பார்த்தார் மன்னர். ஆனால் அவர் மகன் வேல்ஸ் இளவரசரோ ஊதாரிச் செலவு செய்பவராக இருந்தார். பள்ளியில் பயிலும் போதே இந்தப் பழக்கம் அவரைப் பற்றிக் கொண்டு விட்டது.

ஒரு முறை அவர் தம் தந்தையாருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் தமக்கு அனுப்பும் பணத்தைக் கொஞ்சம் கூட்டும்படியாகவும், தமக்குப் பணத் தேவை அதிகமாயிருப்பதாயும் குறிப்பிட்டிருந்தார்.

தந்தையாருக்கு வந்து விட்டது கோபம். உடனே ஒரு கடிதம் எழுதினார். 'உன் ஊதாரிப் பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்ளாவிட்டால், பண விஷயத்தில் ஒரு வணிகனைப் போல் நீ நடந்து கொள்ளாவிட்டால் நீ உருப்பட முடியாது' என்று.

அடுத்த தபாலிலேயே பிள்ளையிடமிருந்து தந்தையாருக்குப் பதில் வந்தது. 'உங்கள் ஆலோசனைப்படி ஒரு வணிகனைப் போல் நடந்து கொள்ளுகிறேன். இப்பொழுது கூட உங்கள் கடிதத்தை ஒருவருக்கு இருபத்தைந்து பவுன்களுக்கு விற்று விட்டேன்.'

தந்தையாருக்கு அழுவதா, சிரிப்பதா என்று தோன்றவில்லை.

## கருவிலே கதாசிரியர்

கதாசிரியர் ஆர்.எல். ஸ்டீவன்ஸன் சிறுவராயிருந்தபோது இது நிகழ்ந்தது.

'துட்டத்தனமா செய்கிறாய். நான் வரச் சொல்லும் வரை அந்த மூலையில் போய் உட்கார்ந்து கொண்டிரு!' என்றாள் தாதிப் பெண்.

அப்படியே சென்று ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டார் ஸ்டீவன்ஸன்.

சிறிது நேரம் சென்றது. 'இவ்வளவு நேரம் உட்கார்ந்தது போதும்' என்று எண்ணிய தாதிப் பெண் 'நல்ல பிள்ளையாய் நடந்து கொள்ளுவதாயின் அங்கிருந்து எழுந்து வா!' என்றாள்.

'சும்மா தொந்தரவு செய்யாதே! எனக்கே நான் ஒரு கதை சொல்லிக் கொண்டிருக்கிறேன்!' என்றார் அந்தப் பிஞ்சுக் கதாசிரியர்.

## இராணிக்குக் குழந்தை

பள்ளிக்குச் சென்றிருந்த குழந்தை, 'அம்மா!' என்று கத்திக் கொண்டு ஓடி வந்தது. 'என்ன கண்ணே!' என்று அன்னை அள்ளியணைத்தாள்.

'எலிசபெத் இராணிக்குக் குழந்தை பிறக்கப் போகிறதாமே!'

'ஆமாம் கண்ணே!'

'எப்படியம்மா இராணிக்குத் தமக்குக் குழந்தை பிறக்கப் போவது தெரியும்?'

'இராணிக்குத்தான் படிக்கத் தெரியுமே! இந்தச் செய்திதான் எல்லாப் பத்திரிக்கைகளிலும் வந்திருக்கிறதே' என்று தாய் சொன்னாள், குழந்தை சிரித்தது தன் கேள்விக்குப் பதில் கிடைத்து விட்டதென்று.

## ஒரே மாடல்

மோட்டார் தொழிலின் மூலம் கோடி கோடியாய்ப் பொருள் குவித்தவர் ஹென்றி போர்டு. அவர் திருமணம் செய்து ஐம்பது ஆண்டுகள் ஆகி விட்டதை ஒரு விழாவாகக் கொண்டாடினார். அதற்காக அவரின் ஊழியர்கள் அளித்த விருந்தொன்றில் கலந்து கொண்டு வெளியே வந்தார் போர்டு.

ஒரு நிருபர் அவரை அணுகி, 'உங்களின் வெற்றிகரமான மண வாழ்விற்கு முக்கிய காரணமாய் எதனைக் குறிப்பிடலாம்?' என்று கேட்டார். 'அதற்கான விதி எளிதானதுதான். வெற்றிகரமான கார் செய்வதற்கான விதி போன்றதுதான் அது.'

'அந்த விதி என்னவென்று சொல்ல முடியுமா?'

'ஒரு மாடலைப் பற்றிப் பிடித்துக் கொள்வதுதான்' என்று கூறிவிட்டுத் தம் மனைவியைப் பார்த்தார் போர்டு. அவர்கள் இருவரையும் நிருபர் பார்த்தார்.

## நன்றாகக் காது கேட்கிறது

ஸ்வீடன் மன்னர் கஸ்டாவ் ஒரு முறை தம்முடைய கிராம விடுதியில் தங்கியிருந்தபோது உலவுவதற்காக வெளியே கிளம்பினார். அவரை வழியில் இரு இளம் பெண்கள் கடந்து சென்றார்கள். அவர்களுள் ஒருத்தி, 'பார்த்தாயா அவரை, கிழவராகத்தானிருக்கிறார்' என்றாள்.

உடனே இன்னொருத்தி, 'ஆமாம் முகத்தில் கூடச்

சுருக்கங்கள் விழுந்து விட்டன' என்றாள். அவர்களை மன்னர் திரும்பிப் பார்த்து, 'ஆனால் அவருக்குக் காது நன்றாகக் கேட்கிறது' என்று கத்தினார்.

## கழுத்தும், தலையும்

இங்கிலாந்து மன்னர் எட்டாம் ஹென்றிக்கும், பிரான்ஸ் மன்னர் முதலாம் பிரான்ஸிஸ்க்கும் கடும் பகை. இருவருக்கும் போர் மூளுவது எந்தக் கணமோ என்றிருந்தது. இந்நிலையில் பிரான்ஸிஸ்க்கு ஒரு கடிதம் அனுப்பி வைக்க எண்ணினார் ஹென்றி. இவ்வித அபாய வேளையில் தூது செல்ல ஏற்ற ஆள் யார் என்று தேடினார் அவர். அவருக்கு அரசப் பிரதானிகளுள் ஒருவர் கிடைத்தார். மன்னர் அவரிடம் அவர் கடமையை விளக்கினார்.

பிரதானிக்கோ குலை நடுக்கம் கண்டு விட்டது. ஏனென்றால் அது எத்தகைய வேலை, தாம் எத்தகைய செய்தியைக் கொண்டு செல்ல வேண்டுமென்பது அவருக்குத் தெரியும். 'மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அவர்களே! தயவு செய்து என்னைக் கொஞ்சம் மன்னித்துக் கொள்ள வேண்டும்' என்று இழுத்தார் அவர். 'என்ன ?' என்று கேட்டார் அரசர். 'தங்களின் செய்தியைக் கொண்டு செல்லும் என் தலையை பிரான்ஸிஸைப் போன்ற ஒரு கோபக்காரன் வாங்காதிருக்கமாட்டான். அதனால் தான்....'

'அச்சப்படாதீர், அவன் மட்டும் உம் தலையை வாங்கட்டும்; நான் இங்குள்ள ஒரு டஜன் பிரஞ்சுக்காரர்களின் தலையை வாங்கி விடுகிறேன்.'

'அது சரி....' என்று கூறித் தலையைச் சொறிந்த பிரதானி, 'அந்தத் தலைகளுள் ஒன்று கூட என் கழுத்துக்குப் பொருத்தமாயிராதே என்றுதான் யோசிக்கிறேன்' என்றார்.

## மார்க் ட்வெய்ன் அனுப்பிய செய்தி

மார்க் ட்வெய்ன் ஆரம்பத்தில் ஒரு பத்திரிகையில் நிருபராகப் பணியாற்றி வந்தார். அப்பொழுது ஒரு நாள் அவரை ஆசிரியர் அழைத்து, 'நீர் நேரில் பார்த்து உண்மை தான் என்று உறுதிப்படாத ஒன்றை ஒருபோதும் எழுதி அனுப்ப வேண்டாம்!' என்று கூறினார். அப்படியே செய்வதாகக் கூறி விட்டு வந்தார் மார்க் ட்வெய்ன்.

அடுத்த நாள் ஒரூரில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடந்தது. அதனைச் சென்று கண்டு செய்தியனுப்புமாறு கேட்டுக் கொண்டனர். அவர் அங்கிருந்து அனுப்பிய செய்தி இதுதான்: 'ஒரு பெண் தன்னை திருமதி ஜேம்ஸ் ஜோன்ஸ் என்று அழைத்துக் கொள்கிறாள். அவள் அந்நகரின் முக்கியமான நங்கையருள் ஒருத்தி என்று' கூறுகிறார்கள். அவள் ஒரு விருந்து வைத்தாளாம். அதுவும் நேற்றாம், அதற்குப் பலர் வந்திருந்தனராம். வந்தவர்கள் அனைவரும் பெண்கள்தானாம். விருந்து வைத்த அந்த நங்கை நல்லாள் தான் ஒரு வழக்கறிஞரின் மனைவி என்று கூறிக் கொள்கிறாள். அவரும் ஒரு புகழ் பெற்ற வழக்கறிஞராம். ஜேம்ஸ் ஜோன்ஸ் என்றால் எல்லோருக்கும் நன்றாகத் தெரியுமாம்.'

## புள்ளி விபரம்தான்

ஜோஸப் ஸ்டாலின் ஆயுதக் கிடங்கு அதிகாரியாயிருந்தபோது அவர் உயர்ந்த அதிகாரிகளைக் கொண்டு ஒரு கூட்டம் கூட்டினார். அதில் அவர்கள் உக்ரைனில் ஏற்பட்டிருந்த பஞ்சம் பற்றி விவாதித்தார்கள்.

ஓர் அதிகாரி எழுந்து நின்று அங்கு நிலவும் பஞ்சத் துயரை உணர்ச்சியுடன் விளக்கத் துவங்கினார். 'நூறாயிரக்கணக்கான மக்கள் பூச்சி, புழுக்களைப் போல செத்து மடிகிறார்கள்' என்று கூறி விட்டு அவர், ஒவ்வொரு பகுதியிலும் இறந்தவர்கள்

தொகையை வாசிக்க ஆரம்பித்தார். உடனே ஸ்டாலின், 'ஒரு மனிதன் இறந்தால் அது பரிதாபத்துக்குரிய விஷயம். நூறாயிரக்கணக்கானவர் இறந்தால் அது வெறும் புள்ளி விபரம்தான்' என்றார்.

## ஸ்காட்டின் நினைவாற்றல்

ஆங்கில மொழியில் அழியாப் பல நவீனங்களை எழுதிப் புகழ் பெற்றவர் ஸர் வால்டர் ஸ்காட். அவர் கதை எழுதுவதில் மட்டும் வல்லவர் அல்லர், கவிதை எழுதுவதிலும் அப்படித்தான்.

ஒரு நாள் அவர் ஒரு கவிதையை நண்பர் ஒருவருக்குப் படித்துக் காட்டி அதனை வெகுவாகப் புகழ்ந்தார். அதன் நடையழகையும் பொருட் செறிவையும் எடுத்து விளக்கி, 'பைரன் பிரபுவின் திறமையே திறமை' என்று அந்தக் கவிதையை எழுதிய பைரனை வாயாரப் பாராட்டினார். நண்பர் சென்ற பிறகு தான் அவருக்குத் தெரிய வந்தது, அந்தக் கவிதையை எழுதியவர் பைரன் அல்லர், தாம் தான் என்பது.

## புத்தகக் கடையில் மார்க் ட்வெய்ன்

மார்க் ட்வெய்ன் நியூயார்க் நகரிலிருந்த ஒரு புத்தகக் கடைக்குள் நுழைந்தார். அங்கிருந்த தடித்த புத்தகம் ஒன்றைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, 'என்ன விலை இது?' என்று கேட்டார். ஊழியன் விலையைச் சொன்னான்.

'நானும் ஒரு 'பப்ளிஷர்' தானப்பா, பப்ளிஷர்களுக்கான 50 சதவீதக் கழிவு ஏன் தரக் கூடாது!' என்றார் ட்வெய்ன். 'சரி' என்றான் ஊழியன். 'அது மட்டுமல்ல, நான் ஓர் எழுத்தாளன். அதற்காக 50 சதவீதம் கழிவு கொடு.' அதற்கும் 'சரி' என்றான் ஊழியன்.

'மறந்து விட்டேன் பார். உங்கள் கடை முதலாளி என் நண்பர், அதற்காக வேண்டி ஒரு 25 சதவீதம் கழிவு கொடுக்கக் கூடாதா ?' இதற்கும் 'சரி' என்றான் அவன். 'நல்லது' என்று கூறி விட்டு, 'நான் எவ்வளவு தர வேண்டும். கணக்குப் பார்த்துக் கூறு!' என்றார் ட்வெய்ன்.

ஊழியன் ஏதோ கணக்குப் பார்த்து விட்டு, 'நீங்கள் ஒன்றும் தரவேண்டியதில்லை, ஐயா! நாங்கள்தாம் உங்களுக்கு முப்பத்தேழரை சென்ட் தர வேண்டும்' என்று கூறியதும், 'சரி, நான் புத்தகத்தை எடுத்துக் கொள்கிறேன். முப்பத்தேழரை சென்டை எண்ணி வை!' என்றார் அந்த நகைச்சுவை மன்னர்.

## ஜான்ஸனின் அகராதி

டாக்டர் ஜான்ஸனின் ஆங்கிலப் பேரகராதி அப்பொழுதுதான் வெளிவந்தது. வெளிவந்தது முதல் அதற்கு நல்ல புகழ்.

ஒரு நாள் டாக்டர் ஜான்ஸனைப் பார்க்க வந்த இரு நங்கையர் அவருடைய அகராதியைப் பற்றி பாராட்டிக் கூறி விட்டு, 'எங்களுக்கு நிரம்பத் திருப்தி, அதில் அசங்கியச் சொற்களை, ஆபாசச் சொற்களையெல்லாம் தாங்கள் தவிர்த்து விட்டதில்தான்' என்றனர். உடனே ஜான்ஸன், 'ஏன் அவற்றை நீங்கள் தேடிப் பார்த்தீர்களா ?' என்று கேட்டதும் அவ்விரு நங்கையரும் அப்படியே வெட்கத்தால் தலைகுனிந்து கொண்டனர்.

## துரதிருஷ்ட நிகழ்ச்சியும், துயர நிகழ்ச்சியும்

ஒரு நாள் நண்பர் ஒருவர் பெஞ்சமின் டிஸ்ரேலியைப் பார்த்து, 'துரதிருஷ்ட நிகழ்ச்சிக்கும், துயர நிகழ்ச்சிக்கும் உள்ள வேறுபாடு என்ன ?' என்று கேட்டார்.

'வில்லியம் கிளேட்ஸ்டன் தேம்ஸ் ஆற்றில் வீழ்ந்து விட்டால் அது துரதிருஷ்ட நிகழ்ச்சியாகும்.' நண்பர் விழித்தார்.

'அவரை எவரேனும் காப்பாற்றி விட்டார்களென்றால் அது துயர நிகழ்ச்சியாகும்' என்று முடித்தார் டிஸ்ரேலி. டிஸ்ரேலிக்கும் கிளேட்ஸ்டனுக்குமிடையே அரசியல் துறையில் கடும் பகை இருந்து வந்தது.

## உதவி

இரஷ்ய மாகாணங்கள் பலவற்றிலிருந்து தூது கோஷ்டியினர் மாஸ்கோ வந்திருந்தார்கள். அவர்கள் கிரெம்ளின் மாளிகையைச் சுற்றிப் பார்க்க விரும்பினார்கள். முதலில் காகஸஸ் பிரதிநிதியை ஸ்டாலின் அழைத்துச் சென்று கிரெம்ளினிலிருந்த ஓர் அறையைக் காட்டினார்.

அங்கிருந்த 'மைக்ரோ போனை'ச் சுட்டிக் காட்டி, 'இங்கிருந்து இந்தச் சிறிய கருவி மூலம் பேசினால் உலகிலுள்ளோர் அத்தனை பேருக்கும் கேட்கும்' என்றார் அவர். 'ஊம்' என்று சொல்லி விட்டு, 'ஒரே ஒரு சொல் மட்டும் தான்' என்றார் ஸ்டாலின். அடுத்த கணம் அந்த காகஸஸ்காரர் மைக்ரோ போன் முன் சென்று 'உதவி!' என்று கத்தினார்.

## பெயர் எடுக்க வந்தவர்

நாலாம் ஜார்ஜ் மன்னர் கிராமப்புறம் ஒன்றிற்குச் சென்றிருந்தார். அப்பொழுது அவர் பிரபல கொள்ளைக் கூட்டத் தலைவன் ஒருவனைச் சந்திக்க நேர்ந்தது. 'ஓ! நீதானா அவன்! உன்னைப் பற்றி நான் நிரம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன். உன் கொள்ளை, கொலைச் செயல்கள் பற்றி எனக்கு நிறையச் செய்திகள் வந்திருக்கின்றன' என்றார்.

'மன்னர் பெருமான் அவர்கள் என் பெயரை எடுக்கத்தான் வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறது' என்றான் அந்தக் கொள்ளைக் கூட்டத் தலைவன் அமைதியாக.

## மாளிகையில் சுவர்க்கம்

ஒரு நாள் பக்திரிய கவர்னர் இப்ராஹீமின் மாளிகைக்குள் எவனோ ஒருவன் தடதடவென நுழைந்து விட்டான். நுழைந்தவன் கீழே நின்றிருக்கக் கூடாதோ ? மட, மடவென மாடிப் படிகளில் ஏறி நாலாம் மாடமே போய்ச் சேர்ந்து விட்டான்.

'யார் நீ ? என்று கேட்டார் எதிரே வந்த அவனைப் பார்த்து இப்ராஹீம். 'நான் ஓர் ஒட்டகைக்காரன், காணாமல் போன என் ஒட்டகையைத் தேட வந்தேன்' என்றான் அவன். 'என்ன உளறுகிறாய், காணாமல் போன உன் ஒட்டகையையாவது, என் மாளிகையின் நாலாம் மாடியில் வந்து தேடுவதாவது, விளையாடுகிறாயா ?' என்று அதட்டிக் கேட்டார் இப்ராஹீம்.

'நீங்கள் உங்கள் மாளிகையின் நாலாம் மாடியில் சுவர்க்கத்தையே தேடும்போது நான் என் ஒட்டகையைத் தேடக் கூடாதா ?' எனக் துடுக்காகக் கேட்டான் அவன். இப்ராஹீம் நடுங்கிப் போய் விட்டார். அரசைத் துறந்து விட வேண்டுமென்னும் எண்ணம் இதிலிருந்து உறுதிப்படலாயிற்று அவருக்கு.

## உதவித் தலைவர்

அமெரிக்க உதவி ஜனாதிபதியாயிருந்த கால்வின் கூலிட்ஜ் வாஷிங்டனிலிருந்த வில்லர்ட் ஹோட்டலில் தங்கியிருந்தார். ஒரு நாள் மாலை ஹோட்டலில் திடீரென்று தீப்பிடித்து கொண்டு விட்டது. மேல் மாடிகளில் இருந்தவர்களெல்லோரும் கீழ் தட்டுக்கு வந்து விட்டார்கள். சின்னேரத்திற்கெல்லாம் தீ அணைக்கப்பட்டு விட்டது. ஆனால் நெருப்பணைக்கும் படைத் தலைவன் எவரையும் மேலே புக விடமாட்டேன் என்றான். கூலிட்ஜூம் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார். இறுதியில் அவர் பாட்டிற்கு மாடிப் படிகளில் ஏறலானார்.

'யார் நீ ?' என்று கேட்டான் நெருப்பணைக்கும் படைத் தலைவன். 'நான் உதவித் தலைவராக்கும்' என்றார் கூலிட்ஜ். 'சரி, போகலாம்' என்றவன், அவர் சில அடிகள் எடுத்து வைப்பதற்குள், 'கொஞ்சம் நில்லுங்கள் !' என்று கத்தினான். கூலிட்ஜ் திரும்பிப் பார்த்தார்.

'எதற்கு உதவித் தலைவர் என்கிறீர்கள் ?' என்றான். 'ஐக்கிய அமெரிக்க நாடுகளுக்கு' என்றார். 'அப்படியா ! கீழே இறங்குங்கள் ! நான் ஹோட்டலின் உதவித் தலைவர் என்றல்லவா எண்ணிக் கொண்டேன்' என்றான் அந்நெருப்பணைக்கும் படைத் தலைவன். கூலிட்ஜ் பேசாமல் இறங்கி விட்டார்.

## பெர்னாட்ஷாவும், அவர் மனைவியும்

ஜார்ஜ் பெர்னாட்ஷா இயற்கையிலேயே பிறரை கிண்டல் செய்யும் இயல்பமைந்தவர். அத்துடன் அவருக்கு அமெரிக்காவைக் கட்டோடு பிடிக்காது. வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் அவர் அமெரிக்காவைத் தாக்கிக் கொண்டேயிருப்பார். அவர் அமெரிக்கா வரப் போகிறார் என்று தெரிய வந்தது அமெரிக்கப் பத்திரிக்கைகளுக்கு. அவற்றில் ஒன்று அவரை மட்டம் தட்ட ஒரு தந்திரத்தைக் கையாண்டது. அதே வேளையில் அவரின் அபிமானிகள் அவர் வரவைப் பிரமாதமாக விளம்பரப்படுத்தி யிருந்தனர். சில அமெரிக்கப் பத்திரிக்கைகள் அவர் வந்த செய்தியையும், கலந்து கொண்ட நிகழ்ச்சிகளையும் அப்படியே இருட்டடிப்புச் செய்து விட்டனர்.

ஆனால், ஒரேயொரு பத்திரிகை மட்டும் இப்படி எழுதியது: 'திருமதி பெர்னார்ட்ஷா மியாமி வந்து சேர்ந்தார். திருமதி பெர்னார்ட்ஷா இந்த விருந்தில் கலந்து கொண்டார். திருமதி பெர்னார்ட்ஷா இந்த விழாவில் கலந்து கொண்டார். திருமதி பெர்னார்ட்ஷா இங்கு வந்தார், அங்குப் போனார்; இப்படிச் சொன்னார், அப்படிக் கேட்டார்' என்று நீளம் நீளமாக எழுதி

விட்டு இறுதியில், 'திருமதி பெர்னார்ட்ஷாவுடன் அவர் கணவரும் வந்திருந்தார். அவர் ஒரு நாடகாசிரியர்' என்று குறிப்பிட்டது.

## உருவச் சிலை திறப்பு விழா

டாக்டர் ஹ்யூஜ் ஹேம்ப்டன் புகழ் பெற்ற ரண சிகிச்சை நிபுணராவார். இத்தனைக்கும் அவர் ஒரு மணமாகாத இளைஞர்தாம். அவரின் சிலையொன்றை நிறுவ வர்ஜீனியா பல்கலைக் கழகம் தீர்மானித்தது. அந்த விழாவில் டாக்டர் ஹ்யூஜ் ஹேம்ப்டனும் கலந்து கொண்டார்.

விழா முடிந்ததும் வெளிவந்த அவரை இளம் பெண் ஒருத்தி சந்தித்து, 'டாக்டர்! தங்களின் உருவச் சிலை திறப்பு விழா காண நான் ஐம்பது மைல்களுக்கு அப்பாலிருந்து வந்திருக்கிறேன்' என்றாள். 'அப்படியா!' என்று பணிந்து கூறிய டாக்டர், 'உங்களின் உருவச் சிலையைக் காண நான் ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வருவேன்' என்றார்.

## அமெரிக்க அதிபரின் மனைவி

அமெரிக்க ஜனாதிபதியாயிருந்த ரூஸ்வெல்டை ஒரு நாள் நண்பர் ஒருவர் பார்க்க வந்தார். இருவரும் சில நிமிடங்கள் வரை ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். இறுதியில் அந்த நண்பர் விடை பெற்றுக் கொள்ளும்போது, 'எங்கே உங்கள் மனைவியைக் காணோம்; வந்ததும் அவரிடம் நான் அவரை நிரம்பக் கேட்டதாகக் கூறுங்கள்' என்றார்.

'நல்ல வேளையாய்ப் போயிற்று. நான் அவளைப் பார்த்தே எத்தனையோ நாட்களாகின்றன. தயவு செய்து அவளைத் தாங்கள் எங்கேயேனும் கண்டால் நான் நிரம்பக் கேட்டதாகக் கூறுங்கள்' என்றார் ரூஸ்வெல்ட்.

## முஸோலினியின் வேண்டுகோளும், ஹிட்லரின் பதிலும்

போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்தபோது ஹிட்லரும், முஸோலினியும் பின்வருமாறு தந்திகள் பரிமாறிக் கொண்டனர். முஸோலினி ஹிட்லருக்கு : 'நிலைமை நிரம்ப மோசம், உணவு அவசரமாகத் தேவைப்படுகிறது, தயவு செய்து அனுப்பி வையுங்கள்.'

ஹிட்லரிடமிருந்து முஸோலினிக்கு : 'உணவுப் பொருள் தங்கட்கு ஒதுக்குவதற்கு வசதி இல்லை, வருந்துகிறேன். ஒவ்வொரு தானிய மணியும் உள்நாட்டிற்கும், ரஷ்ய முனைக்கும் தேவைப்படுகிறது. பெல்டை இறுக்கிக் கொள்ளுமாறு ஆலோசனை கூறுகிறேன்.'
முஸோலினியிடமிருந்து ஹிட்லருக்கு : 'தயவுசெய்து 'பெல்ட்' அனுப்பி வையுங்கள் !'

## மத்தியஸ்தரும், கால்பந்தும்

ஐரிஷ் தேசீயவாதிகளுக்கும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்கட்கும் மத்தியஸ்தம் செய்து வைக்கும் வேலையில் ரோஸ்பரி பிரபு ஈடுபட்டிருந்தார். அவரின் அயரா முயற்சி கண்டு மகிழ்ந்த ஐரிஷ் தேசீயவாதி ஒருவர் அவரைப் பாராட்டி விட்டு, 'சமாதானம் செய்து வைக்க நீங்கள் எடுத்துக் கொள்ளும் சிரமத்திற்கு மிக்க நன்றி. நீங்கள் எங்களின் ஒரே மத்தியஸ்தராயிருக்கிறீர்கள்' என்றார்.

'என்ன மத்தியஸ்தரா ?' என்று கத்தி விட்டு ரோஸ்பரி பிரபு கூறினார், 'உங்கள் கட்சிக்காரார் விரும்புவது ஒரு மத்தியஸ்தரை அல்ல, ஒரு கால் பந்தைத் தான்' என்று.

## களத்தில் வைத்துக் கவிதைகள்

எரிக்மேரியா ரிமார்க் என்பவர் சிறந்த எழுத்தாளர்களுள் ஒருவர். அவர் எழுதிய 'மேற்கு முனையில் எல்லாம் அமைதி' என்னும் நூல் நிறைய விற்பனையாகி அவருக்கு நிறையப் புகழையும், பொருளையும் ஈட்டிக் கொடுத்தது. அவர் அடுத்து எழுதிய 'வெற்றி வளைவு' என்பதும் அப்படித்தான்.

ஒரு நாள் அவரிடம் ஒருவர், 'உங்களின் முதல் நூல் உலகப் போரின் போது நீங்கள் எழுதி வைத்த நாட் குறிப்பிலிருந்து எழுதப்பட்டதுதானே ?' என்று கேட்டார். 'இல்லை' என்று மறுத்துவிட்டு எரிக்மேரியா ரிமார்க் கூறினார் : 'நான் ஒரு நாட்குறிப்பும் வைத்துக் கொள்ளவில்லை. போர் முடிந்து பத்து ஆண்டுகள் கழித்துத்தான் நான் அந்த நூலை எழுதினேன். அதுவும் எங்கு வைத்துத் தெரியுமா ? மலர்கள் பூத்துக் குலுங்கும் நாடு என்று பெருமையடித்துக் கொள்ளும் ஒரு நாட்டில் வைத்து' என்றார். 'அப்படியென்றால் போரின்போதும், போர்க் கொடுமைகளுக்கு மிடையில் வாழும் போதும் நீங்கள் ஒன்றுமே எழுதவில்லையா ?' என்று கேட்டார் அவர்.

'எழுதினேன்; அவையெல்லாம் கவிதைகள் - மலர்களைப் பற்றியவை' என்று விடையளித்தார். எரிக் மேரியா இப்படிக் கூறியதும் எதிரேயிருந்தவர் திகைத்துப் போனார்.

## கொலையும், தற்கொலையும்

ஜெர்மனியில் ஹிட்லரைக் கொல்வதற்கான சதியொன்று 1944 ஜூலை 29 ல் நடந்தது. அதிலீடுபட்டவர்கள் என்று பல்லாயிரம் பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களுள் 1495 பேரைச் சுட்டுக் கொல்லுமாறு ஹிட்லர் கட்டளையிட்டார். 7000 பேரைச் சிறை செய்து சித்திரவதை செய்யுமாறு ஆணை பிறப்பித்தார்.

மத்திய கிழக்கில் ஜெர்மனிக்குப் பெரும் வெற்றி பெற்றுத் தந்த ஜெனரல் ரோமலும் சதி செய்தவர்களுள் ஒருவர் என்று தெரிந்தபோது ஹிட்லர் சிறிது கருணை காட்டினார். அவர் காட்டிய கருணை இதுதான். ஜெனரல் ரோமலைச் சுட்டுத் தள்ள விரும்பவில்லை ஹிட்லர்; அவரைத் தற்கொலை செய்து கொள்ள அனுமதித்தார்.

## ஜெர்மனிக்குச் சென்றதில்லை

சமாதானத் தூதுவர் ஒருவர் ஜார்ஜஸ் கிளமென் ஸீனிடம் கேட்டார்: 'ஜெர்மன்காரர்களை நீங்கள் இவ்வளவு தூரம் வெறுக்கிறீர்களே, உண்மையில் நீங்கள் ஜெர்மன்காரர்களைப் புரிந்து கொண்டுதான் வெறுக்கிறீர்களா ?...... ஆமாம், நீங்கள் எப்பொழுதேனும் ஜெர்மனிக்குப் போயிருக்கிறீர்களா ?'

கிளமென் ஸீன் அதற்குப் பதில் கூறினார், 'நான் ஜெர்மனிக்குச் சென்றதில்லை. ஆனால் ஜெர்மன்காரர்கள் இரு முறை பிரான்ஸுக்கு வந்திருக்கிறார்கள்' என்று.

## வாழ்க காப்பி

இளம் செக்கோஸ்லவேகியப் பெண்ணொருத்தி ஜெர்மன் தொழிற்சாலையொன்றில் வேலை செய்து வந்தாள். அவள் எப்பொழுதும் காலம் தாழ்த்தியே வேலைக்கு வருவது வழக்கம். 'ஏன், சீக்கிரமாய் வர முடியாதா ?' என்று மேலதிகாரி அவளைப் பார்த்துக் கேட்டபோது அவள் கூறினாள்: 'என்னால் காப்பி சாப்பிடாமல் எழுந்திருக்க முடியாது' என்று. அவளின் இந்தப் பதிலைக் கேட்டதும் மேலதிகாரிக்கு ஆத்திரம் வந்து விட்டது. 'நீ இனிமேல் இருபது நிமிடங்களுக்கு முன்பே வேலைக்கு வந்து விட வேண்டும்' என்று கட்டளையிட்டார் அவர். அம்மட்டுமல்ல, 'என்னால் காப்பி இல்லாமலே சமாளிக்க முடியும், வாழ்க ஹிட்லர் !' என்று நூறு முறை இம்போஸிஷனும் எழுத வேண்டும்' என்றும் தண்டனை விதித்தார் அந்த மேலதிகாரி.

அதன்படி அவள் இருபது நிமிடங்களுக்கு முன்னதாகவே அலுவலகத்திற்கு வந்தாள். வழக்கத்திற்கு மாறாகச் சீக்கிரம் அவள் எழுந்து விட்டதால் அவளைத் தூக்க கிறக்கம் எளிதில் விடவில்லை. என்றாலும் 'இம்போஸிஷன்' எழுதாமல் இருக்க முடியுமா? எழுதாமல் இருந்து விட்டால் தண்டனை மேலும் அதிகமாகும் என்பது அவளுக்குத் தெரியும். கொட்டாவி விட்டுக் கொண்டே அவள், 'என்னால் காப்பி இல்லாமலே சமாளிக்க முடியும், வாழ்க ஹிட்லர்!' என்பதற்குப் பதிலாக 'என்னால் ஹிட்லர் இல்லாமலே சமாளிக்க முடியும், வாழ்க காப்பி!' என்று எழுதி வைத்தாள்.

## பெய்ஸலின் கேள்வி

இராக் மன்னர் பெய்ஸல் எண்ணெய் சுத்திகரிப்பு நிபுணர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவரின் இளம் மகன் இரண்டாம் பெய்ஸலும் கூடவேயிருந்து அவர்கள் பேசிக் கொள்வதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

பேச்சினிடையில் நிபுணர் ஒருவர், 'எனக்கு பைசைக்கிளில் செல்லும்போதுதான் வேகமாகச் சிந்திக்க இயலுகிறது' என்றார். அப்பாவின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த இளம் பெய்ஸல், 'அப்படியானால் மோட்டார் சைக்கிளில் செல்லுங்களேன்; அதை விட வேகமாக சிந்திக்கலாம்' என்றார்.

## பிடித்தார்! பார்த்தார்!! விட்டு விட்டார்!!!

கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் அவர்களை ஜெனரல் ஹாஸ்பிடலில் அட்மிட் செய்யப்பட்டிருந்தது.

அவருடைய நண்பர்களில் சிலர் அவரைப் பார்க்க வந்தார்கள். பரிவுடன் படுக்கை விளிம்பில் உட்கார்ந்து கொண்டு அவர்களுள் ஒருவர் கேட்டார், 'என்ன, டாக்டர் வந்தாரா,

பார்த்தாரா ?' என்று. 'ஆமாம், வந்தார்; கையைப் பிடித்தார்; பார்த்தார்; விட்டு விட்டார்; என்றார் என்.எஸ். கிருஷ்ணன் சிரித்துக் கொண்டு.

## இரட்டைக் குழந்தைகள்

மார்க் ட்வெய்ன் தம் இளமை வாழ்வில் நிகழ்ந்த மிகவும் துக்ககரமான சம்பவம் ஒன்றை அடிக்கடிக் கூறிக் காட்டுவது வழக்கம். அவர், அவருடைய பெற்றோருக்கு இரட்டைக் குழந்தையாகப் பிறந்தவராம். அவரும் அவருடன் பிறந்த குழந்தையும் உருவத்தில் ஒரு சிறிதும் மாறுபாடில்லாமல் ஒரே அச்சில் வார்க்கப்பட்டவர்கள் போல் இருந்தனராம். இரு குழந்தைகளுள் யார், யார் என்று பெற்ற தாயால் கூட அடையாளம் தெரிந்து கொள்ள இயலாதாம்.

தாதி ஒரு நாள் தண்ணீர் நிறைந்த தொட்டியில் வைத்து குழந்தைகளைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தாளாம். அப்பொழுது ஒரு குழந்தை, கை தவறித் தொட்டிக்குள் விழுந்து நீர் புரையேறி இறந்து போய்விட்டதாம். இறந்து போனது எந்தக் குழந்தை என்று எவராலும் கூற முடியவில்லையாம். அந்தத் துயர நிகழ்ச்சி பற்றித்தான் மார்க் ட்வெய்ன் உருக்கமாகக் கூறுவார்: 'அது ஒரு துரதிஷ்ட நிகழ்ச்சி. எல்லோரும் நினைத்தார்கள், உயிர் வாழும் குழந்தை நான் தான் என்று. ஆனால் உண்மையில் நான் அல்ல உயிர் வாழும் குழந்தை, என் சகோதரன் தான். நீர்த் தொட்டியில் புரையேறி இறந்த குழந்தைதான் நான்' என்று.

## மலர்களும், குழந்தைகளும்

பெர்னார்ட்ஷாவை ஒரு நாள் பிரமுகர் ஒருவர் பார்க்க வந்திருந்தார். வந்தவருக்கு ஷாவின் வீட்டில் ஒரு பூத்தொட்டி கூட இல்லாதிருப்பது பெரும் வியப்பாக இருந்தது. 'உங்களை நான் மலர்கள் மீது பிரியமுள்ளவர் என்றல்லவா எண்ணிக் கொண்டிருந்தேன் ?' என்றார் அவர்.

'ஆமாம், நான் மலர்கள் மீது பிரியமுள்ளவன்தான். அத்தோடு எனக்குக் குழந்தைகளின் மீதும் பிரியமுண்டு, அதற்காக வேண்டி குழந்தைகளின் தலைகளை அரிந்து வந்து ஜாடிகளில் மாட்டி வீடெங்கும் வைத்திருக்க மாட்டேன்' என்று ஷா சொன்னதும் வந்தவர் முகம் சுருங்கிப் போய் விட்டது.

## கணித மேதையின் விதி

ஒரு முறை ஈன்ஸ்டீனைப் பேட்டி கண்ட ஒருவர், 'வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கான சிறந்த விதியொன்றைக் கூறுங்கள்' என்று கேட்டார். ஈன்ஸ்டீன் கணித மேதையல்லவா? கணித விதி போலவே ஒரு விதி கூறினார். அதாவது எக்ஸையும் ஒய்யையும் இஸட்டையும் கூட்டினால் 'ஏ' கிடைக்கும் என்பதாகும் அது.

'ஏ என்றால் என்ன?' என்றார் கேள்வி கேட்டவர். 'ஏ என்பது வாழ்வில் வெற்றி, 'எக்ஸ்' என்றால் வேலை, 'ஒய்' என்றால் ஓய்வு' என்றார் ஈன்ஸ்டீன். 'இஸட் என்றால்......?' என அவர் கேட்க 'ஓ! அதுவா! உங்கள் வாயை மூடிக் கொண்டிருப்பது' என்றார் ஈன்ஸ்டீன் சிரித்துக் கொண்டு.

## பொறுத்திருக்கத் தயார்!

ஒரு நாடகக் கம்பெனி முதலாளிகள் பெர்னாட்ஷாவிடம் அவர் நாடகம் ஒன்றை நடிக்கத் தாங்கள் விரும்புவதாகவும் ஆனால் தங்களின் கம்பெனி சிறியதாகையால் அதனிடமிருந்து அவர் அதிகம் எதிர்பார்க்கக் கூடாதென்றும் எழுதியிருந்தார்கள்.

உடனே, பெர்னாட்ஷா பதில் எழுதினார்: 'நாடகத்திற்குக் குறைவாகப் பணம் பெற முடியாது. உங்கள் கம்பெனி சிறியது என்று எழுதியிருந்தீர்கள், உங்கள் கம்பெனி பெரிதாகும் வரை நான் பொறுத்திருக்கிறேன். பெரிதானதும் நான் கேட்கும்

தொகையைத் தந்து விட்டுத் தாங்கள் தாராளமாக நடித்துக் கொள்ளுங்கள்.'

## தூதுவர் தொழில்

வழக்கறிஞனாய்த் தொழில் நடத்தி விட்டுப் போர் வீரனாய் மாறியிருந்த ஓர் இளைஞனைத் தம்முடன் விருந்துண்ண வருமாறு அழைத்திருந்தார், இங்கிலாந்தில் அமெரிக்கத் தூதராயிருந்த ஜான் வினான்ட். 'எனக்குத் தூதர் வேலை நிரம்பப் பிடித்திருக்கிறது' என்றான் அந்த முன்னாள் வழக்கறிஞன். 'போர் முடிந்ததும் அந்தத் துறையில்தான் ஈடுபட எண்ணியிருக்கிறேன். அதற்கு வேண்டிய தகுதி என்னவென்று தாங்கள் கூற முடியுமா ?' என்று கேட்டான் அவன் வினான்டைப் பார்த்து.

வினான்ட் சொன்னார்: 'மக்களுள் இரு வகையினர் உள்ளனர். ஒரு வகையினர்க்குத் தந்திரம் தெரியும். இன்னொரு வகையினர் வெள்ளையானவர்கள்; உள்ளது உள்ளபடி கூறிவிடுவார்கள். உன்னிடம் நான் முதலில் குறிப்பிட்டது இருக்குமானால் இந்தத் துறையில் ஈடுபட நீ என் உதவியை நாட வேண்டியதில்லை. உன்னிடம் இரண்டாம் தன்மை இருக்குமாயின் 'வேறு தொழிலைப் பார்' என்றுதான் உனக்கு நான் ஆலோசனை சொல்ல வேண்டும்.'

## துவக்கமும், முடிவும்

ஹெர்மோடின்ஸ் என்பவர் உயர் குடியில் பிறந்தவர். அவர் மூதாதையர்களெல்லாம் பிரபுக்களாயிருந்தார்கள். பெரும் குடியில் பிறந்தவர் நாம் என்னும் கர்வத்தில் அவர் ஒரு நாள் இபிக்ரேட்ஸை மிகவும் கேவலமாகப் பேசி விட்டார். இபிக்ரேட்ஸ் ஒரு செருப்பு தைப்பவரின் மகன். ஆனால் அவர் திறமையாலும், உழைப்பாலும் ஒரு தளபதியாகி இருந்தார்.

நாம் கீழ்க்குடியில் பிறந்து விட்டோம் என்பதற்காக இத்துணைக் கேவலப்படுத்தி விட்டாரே என்னும் வருத்தத்தால் எழுந்த ஆத்திரத்தில், 'ஆம் ஐயா! என் மேன்மை என்னுடன் துவங்குகிறது. ஆனால், உங்கள் மேன்மையோ உங்களுடனல்லவா முடிவடைகிறது' என்றார் இபிக்ரேட்ஸ், ஹெர்மோடின்ஸை நோக்கி.

## நூற்றுக்கு நூறு தகுதி

போர் மும்முரமாய் நடந்து கொண்டிருந்தபோது பிரிட்டிஷ் பிரதமராயிருந்த வின்ஸ்டன் சர்ச்சில் தளபதி மாண்ட் கோமரியைப் போர்முனை ஒன்றில் சந்தித்தார். 'எப்படி இருக்கிறீர்கள்?' என்று கேட்டார் சர்ச்சில், மாண்ட்கோமரியைப் பார்த்து.

'நான் புகைப்பதில்லை. குடிப்பதில்லை. அதனால் நூற்றுக்கு நூறு வேலைக்குத் தகுதியாக இருக்கிறேன்' என்று கூறினார் தளபதி. பிரதமரின் புகைக்கும், குடிக்கும் பழக்கத்தை குத்திக் காட்டி விட்டதாகத் தளபதிக்கு நினைப்பு. சர்ச்சிலா விடுபவர். 'ஆமாம் நான் புகைக்கிறேன். குடிக்கிறேன். நானும் நூற்றுக்கு நூறு வேலைக்கு தகுதியுள்ளவனாயிருக்கிறேன்' என்றார் சட்டென.

## பழத் தோட்டக் காவல்காரரின் நேர்மை

அரசைத் துறந்த ஆத்ம ஞானியான இப்ராஹீம், தம்மைத் தெரியாத ஓர் ஊரில் போய் அங்குப் பழத்தோட்டக் காவலாளியாய்ப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது ஒரு நாள் தோட்டத்தின் சொந்தக்காரர் அங்கு வந்து இப்ராஹீமைப் பார்த்து, 'நல்ல திராட்சைகளாகப் பறித்து வாரும்!' என்று கட்டளையிட்டார். எஜமானனின்

ஆணைப்படி இப்ராஹீமும் தோட்டத்திற்குள் நுழைந்து சில பழங்களைப் பறித்து வந்து கொடுத்தார்.

பழத் தோட்டத்தின் சொந்தக்காரர் ஒரு பழத்தைத் தான் எடுத்து வாயில் வைத்தார். வாயில் வைத்தவரின் முகம் சுளித்தது, 'தூ, தூ' எனத் துப்பினார். இன்னொரு பழத்தை எடுத்து சுவைத்துப் பார்த்தார். அதுவும் அப்படித்தான் புளித்தது, அவருக்குக் கோபமே வந்து விட்டது. 'நல்ல பழங்களாய்ப் பறித்து வரச் சொன்னால் இப்படித்தான் பறித்து வருவதா ? எல்லாம் ஒரே புளிப்பு. எந்த மரத்துப் பழம் புளிக்கும், எந்த மரத்துப் பழம் இனிக்கும் என்பது கூடத் தெரியாதா ?' என்று கேட்டார் அவர். 'எஜமானே ! நான் தோட்டக் காவலாளி மட்டும்தானே !' என்று அமைதியாகப் பதில் கூறினார் இப்ராஹீம். 'இப்படிப் பதில் சொல்லும் மனிதர் அவராகத்தானே இருக்க வேண்டும்' என எண்ணித் தோட்டத்தின் சொந்தக்காரர் ஏறிட்டுப் பார்த்தார். அவர்தாம் பக்தீரிய கவர்னராயிருந்த இப்ராஹீம் என்று தெரிந்து விட்டது. தம்மைத் தெரிந்து கொண்டு விட்டார் என்று தெரிந்ததும் இப்ராஹீம் அங்கிருந்தல்ல, அந்த ஊரை விட்டே போய் விட்டார்.

## மரமும் மனிதனும்

ஒரு நாள் அக்பரின் அரசவைப் புலவராயிருந்த கானே கானான் என்பவர் நகரத் தெருக்களில் ஊர்வலமாகப் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் பகைவன் ஒருவன் அவர் மீது மண்கட்டி ஒன்றை எடுத்து எறிந்தான். 'அவனைப் பிடியுங்கள் !' என்று கட்டளையிட்டார் கானே கானான். அவ்வாறே அவனைப் பிடித்துக் கொண்டு வந்து அவர் முன் நிறுத்தினார்கள்.

அருகில் வந்து கொண்டிருந்த அதிகாரி ஒருவரை பார்த்து, 'ஆயிரம் ரூபாய் கொடும் அவனுக்கு !' என்று கூறினார் அவர். அவ்விதம் கொடுக்க அதிகாரி மறுத்தபோது கானே கானான் கூறினார். 'மரம் தன் மீது கல்லை விட்டெறிந்தவனுக்குப் பழம்

கொடுக்கிறது, நான் என் மீது மண் கட்டியை விட்டெறிந்தவனுக்கு ஏதேனும் கொடுக்க வேண்டுமல்லவா ?' என்று.

## ஜூரியின் கருத்து

மார்க்ஸ் ஸ்டீனர் என்பவர் நியூயார்க் நகரின் புகழ் பெற்ற வழக்கறிஞர்களுள் ஒருவர். அவர் மிகவும் பிரபலமான வழக்குகளுக்கெல்லாம் ஆஜராகியிருக்கிறார். ஒருமுறை அவர் பிரதிவாதித் தரப்புக்கு ஆஜரானார். அப்பொழுது அவர் ஜூரியைப் பார்த்து, 'என் கட்சிக்காரர் குற்றவாளியா அல்லவா என்பது பற்றி ஏற்கனவே நீங்கள் ஏதேனும் கருத்துக் கொண்டிருக்கிறீர்களா ?' என்று கேட்டார்.

'நிச்சயமாக' என்றார் அந்த ஜூரி. 'உம் கட்சிக்காரனே குற்றவாளி என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன் நான். இல்லாவிட்டால் ஏன் அவன் உம்மை வந்து பிடிக்கிறான் ?' என்றார் அவர்.

## நாதிர்ஷா செய்த தந்திரம்

நாதிர்ஷா ஒரு முறை பள்ளிவாயிலுக்குச் சென்றிருந்தார். அப்பொழுது பள்ளிவாயிலின் படியில் ஒரு குருடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டார் அவர். 'எவ்வளவு காலமாய் இங்கு உட்கார்ந்திருக்கிறாய் ?' என்று குருடனைப் பார்த்துக் கேட்டார் நாதிர்ஷா. 'பத்து ஆண்டுகளாய்' என்று அந்தக் குருடன் பதில் சொன்னான்.

உண்மையில் அவன் குருடன் தானா என்னும் ஐயம் ஏற்பட்டது நாதிர்ஷாவுக்கு. அத்னைச் சோதித்துப் பார்க்க விரும்பினார் அவர். 'இப்பொழுதே நீ இங்கிருந்து எழுந்து ஓடாவிட்டால் நான் உன் தலையை வாங்கி விடுவேன். நான்

நாதிர்ஷாவாக்கும்' என்றார் அவர். அவ்வளவுதான், அடுத்த கணம் அவன் அங்கிருந்து எடுத்தானே ஓட்டம்.

## நீதிபதியின் ஆசை

ஒரு முறை நீதிபதி டார்லிங் ஒரு பெண்மணியைத் தம்முடன் விருந்துண்ண அழைத்திருந்தார். இருவரும் மேஜையின் எதிர் எதிராக அமர்ந்து கொண்டனர். 'உங்களை நான் எப்படி அழைக்கட்டும். நீதிபதி டார்லிங் என்றா, டார்லிங் நீதிபதி என்றா ?' என்று கேட்டாள் அந்தப் பெண்மணி.

'வெறுமனே 'டார்லிங்' என்று அழைத்தால் போதும்' என்றார் நீதிபதி. ('டார்லிங்' என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு 'அன்பே!' என்று பொருள். பெரும்பாலும் காதலர்கள் தாம் அதனைப் பயன்படுத்திக் கொள்வர்.)

## அச்சு நாட்டுத் தலைவர்களின் அச்சம்

அச்சு நாடுகளின் அச்சாணிகளாகயிருந்த ஹிட்லர், கோயரிங், கோயபல்ஸ் இவர்கள் மூவரும் ஒரு நாள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது கோயபல்ஸ் கேட்டார், 'இப்படி வெண்ணெய்க்கும் உருளைக் கிழங்குக்கும் பஞ்சமாயிருக்கிறதே, அவற்றிற்காகும் பணத்தையெல்லாம் நாம் விமானங்கள் செய்வதற்கும், பீரங்கிகள் செய்வதற்கும் செலவழிக்கிறோமே ? இதையெல்லாம் பார்த்து ஜெர்மன் மக்கள் வெறுத்துப் போய் 'திடும்' எனக் கலகம் செய்யத் துவங்கி விட்டால் என்ன செய்வது ?' என்று. 'நான் விமானப் படைத் தலைவன், ஏதேனும் ஒரு விமானத்தில் ஏறிக் கொண்டு எங்கேயேனும் கிளம்பி விடுவேன்' என்றார் ஹெர்மான் கோயரிங்.

'நான் அப்படியொன்றும் ஓட வேண்டியதில்லை என்னுடைய யூத மூக்கின் உதவியால் நான் கும்பலுள் கலந்து

கொண்டு விடுவேன். என்னை நாஜிகளின் நண்பன் என்று எவராலும் கண்டு கொள்ள இயலாது' என்றார் கோயபல்ஸ். அவர்கள் கூறுவதைக் கேட்டுக் கொண்டிருந்த அடால்ப் ஹிட்லர் சிரித்துக் கொண்டே, 'நான் ஒன்றைத் தங்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். நான் ஓர் ஆஸ்திரியாக்காரன். அதனால் அயல் நாட்டவர்களுக்குக் கிடைக்கும் பாதுகாப்பு எனக்குக் கிடைத்துவிடும்' என்று கூறினார்.

## ரோமியோவாகவா? மாக்பெத்தாகவா?

ஷேக்ஸ்பியர் நாடகங்களை நடிக்கும் சிறு நாடகக் கம்பெனி ஒன்று ஒரு சிற்றூரில் முகாமிட்டிருந்தது. அந்தக் கம்பெனிக்குப் பொருளாதார வசதிகள் மிகவும் குறைவு. ஏதோ வயிற்றிற்கு உணவு கிடைக்கிறதே என்று தான் நடிகர்கள் அதில் ஒட்டிக் கொண்டிருந்தனர். இல்லாவிடில் என்றைக்கோ அவர்கள் அதை விட்டு ஒடிப் போயிருப்பார்கள். அன்று நடிகர்களும் நிர்வாகியும் ஒரு சிறிய மதுக்கடையில் உட்கார்ந்து வம்பளந்து கொண்டிருந்தனர். இங்கிலாந்தில் இப்படிப்பட்ட மதுக் கடைகள் நிறைய உண்டு. அவற்றில் உட்கார்ந்து கொண்டு வானத்தின் கீழேயுள்ள அத்தனை விஷயங்களையும் பேசித் தீர்க்கலாம். 'இன்று நடக்கப் போவது ரோமியோவும், ஜூலியட்டும். மறந்து விடாதீர்கள்' என்றான் நடிகர்களுள் ஒருவன் தன் நண்பர்களைப் பார்த்து.

'என்ன, ரோமியோவும் ஜூலியட்டுமா ? நான் மாட்டேன். முகத்திலே மூன்று நாள் மயிர் காடாய் வளர்ந்து கிடக்கிறது. இப்படி இருந்து கொண்டு ரோமியோவாக எப்படி நடிப்பதாம் ?' என்றான் கதாநாயகனாய் நடிப்பவன். நிர்வாகிக்கு கோபம் வந்து விட்டது. 'இன்று நீ ரோமியோவாக நடிக்கத்தான் வேண்டும்' என்றார் அவர். 'அப்படியானால் ஒரு நாவிதனை வரவழையுங்கள். நான் அவசியம் க்ஷவரம் செய்து கொள்ள வேண்டும்' என்றான் கதாநாயக நடிகன்.

'அப்பனே! அதற்குக் காசிருந்தால் இந்தப் பேச்சுக்கே இடமேது? சரி, ஒழியட்டும் ரோமியோவும் ஜூலியட்டும். நீ க்ஷவரமும் செய்ய வேண்டாம், ஒன்றும் செய்ய வேண்டாம்; மாக்பெத்தாய் நடித்துத் தொலை' என்றார் நாடகக் கம்பெனி நிர்வாகி.

## செல்வாக்குச் சக்தி

ராபர்ட் மென்ஸீஸ் ஆஸ்திரேலியப் பிரதமராகப் பதவியேற்ற பின் அவர் பத்திரிகை நிருபர்கட்கு ஒரு பேட்டியளித்தார்.

அப்பொழுது ஒரு நிருபர், 'உங்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் மிக்க செல்வாக்குச் சக்திகளைக் கலந்தாலோசித்த பிறகுதான் தாங்கள் மந்திரிசபை அமைப்பீர்களோ?' என்று கேட்டார். உடனே மென்ஸீஸ் சொன்னார், 'இளைஞரே! ஆற்றல் மிக்க செல்வாக்குச் சக்தி என்று நீர் குறிப்பிட்டீரே, அதிலிருந்து என் மனைவியை அகற்றி விடும்' என்று.

## டயானாவின் பதில்

டியானா பார்ரிமோர் நியூயார்க்கிற்கு வந்தாள். வந்தவள் தன் தாய் வீட்டிற்குச் சென்று மணியை அழுத்தினாள். திருமதி பார்ரிமோர் வீட்டின் புதிய சமையல்காரன் கதவைத் திறந்து கொண்டு வந்தான், 'ஒஹோ, அம்மா உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்களோ?' என்றான்.

டியானா சொன்னாள், 'ஆமாம், அம்மா என்னைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் நான் பிறப்பதற்கு முன்' என்று.

## போப்பாண்டவரின் படைத் தொகுதிகள்

இரஷ்யத் தலைவர் ஸ்டாலினிடம் ஒருவர், 'போப்பாண்டவரின் அரசான வாட்டிகனுக்கும் ஒரு தூதரைத் தாங்கள் அனுப்பி வைத்தால் என்ன?' என்று கேட்டபோது ஸ்டாலின் கேள்வி கேட்டவரையே திருப்பிக் கேட்டார், 'ஏன், போப்பாண்டவரிடம் எத்தனை படைத் தொகுதிகள் இருக்கின்றன?' என்று.

இது போப் பயஸுக்குத் தெரிய வந்தது. அவர் சொன்னார், 'என் மகன் ஜோஸப் என் படைத் தொகுதிகளைச் சுவர்க்கத்தில் சந்திக்கலாம்' என்று.

## நிருபரின் திறமை

மார்க் ட்வெய்னைப் பத்திரிகை நிருபர் ஒருவர் பேட்டி காண வந்திருந்தார். அவரிடம் ட்வெய்ன், 'நான் இளைஞனாயிருந்த போது ஜனாதிபதி மேடிஸன் என்னிடம் சொன்னார்......' என்று எதையோ சொல்ல ஆரம்பித்தார்.

நிருபர் குறுக்கிட்டு, 'மேடிஸன் ஜனாதிபதியாகயிருந்தபோது நீங்கள் பிறந்து கூட இருக்க மாட்டீர்களே?' என்று கேட்டதும் ட்வெய்ன் கூறினார், 'அச்சுக்குப் போகுமுன் தவறைத் திருத்திய முதல் நிருபர், நான் சந்தித்த வரையில் நீர்தாம்' என்று.

## ஜின்னாஹ்வைப் போலவே அவர் மனைவி

ஜின்னாஹ்வும் அவர் மனைவி ரத்தன்பாய் பெடிட்டும் இந்திய வைஸ்ராயான செம்ஸ் போர்டு பிரபு அளித்த விருந்திற்குச் சென்றிருந்தார்கள். வைஸ்ராய்க்குத் தம்மை அறிமுகப்படுத்தி வைக்கும்போது ஜின்னாஹ்வின் மனைவி அவருடன் கை குலுக்காமல் இந்திய முறையில் வணக்கம் செலுத்தினார். இது

வைஸ்ராய்க்குப் பிடிக்கவில்லை. விருந்து முடிந்தது. அவரை வைஸ்ராய் அழைப்பதாக ஒருவன் வந்து ரத்தன்பாயிடம் கூறினான். ரத்தன்பாய் எழுந்து சென்றார்.

'உங்கள் கணவருக்கு நல்ல அரசியல் எதிர்காலமிருக்கிறது. அதை நீங்கள் கெடுத்து விடக்கூடாது. ரோமாபுரியில் நீங்கள் இருக்கும்பொழுது ரோமானியர்களைப் போலவே நடந்து கொள்ள வேண்டும்' என்று கூறினார் வைஸ்ராய் ரத்தன்பாயைப் பார்த்து.

ரத்தன்பாய் துடுக்கான நாவு பெற்றவர். எனவே, சிறிதும் தயங்காது அவர் கூறினார், 'நீங்கள் எதைச் சொல்லுகிறீர்களோ அதைத்தான் நான் உங்களுக்கும் சொல்ல விரும்புகிறேன். இந்தியாவில் இந்திய முறையில்தானே வணக்கம் செய்ய வேண்டும்' என்று.

## வருமானமும், நாடக அரங்கேற்றமும்

ஜூடித் ஆண்டெர்ஸன் ஒரு முறை பெர்னாட்ஷாவிடம் அவருடைய நாடகமான 'செயின் ஜோனை' நடிப்பதற்கு அனுமதி கேட்டார்.

அதற்கு பெர்னாட்ஷா எழுதினார்: 'வருமான வரி மிகவும் அதிகமாக இருக்கிறது. இறுதியில் எனக்கு மிஞ்சுவது ஒன்றுமேயிராது. என் வருமானத்திற்கும், என் நாடகம் அரங்கேறுவதற்கும் இடையே நான் தேர்ந்தெடுப்பது என் வருமானத்தைத் தான்.'

## ஐந்து நிமிடங்களும், ஐந்து பவுனும்

புகழ் பெற்ற இங்கிலீஷ் எழுத்தாளர் ஜார்ஜ் மூரும் ஐரிஷ் அறிஞரான ஆலிவர் கெகார்டியும் ஒரு நாள் இரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது இயற்கைக் காட்சிகள்

பற்றிப் பேச்சுத் திரும்பியது. ஜார்ஜ் மூருக்கோ இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிப்பதிலோ, அவற்றைப் பற்றிப் பேசி மகிழ்வதிலோ சிறிதும் அலுப்புத் தட்டுவதில்லை. அவருக்கு ஏற்றார் போலவே இரயில் வண்டி அப்பொழுது இயற்கை எழில் மிக்க மலை நாடு வழியாகச் சென்று கொண்டிருந்தது. மரகதக் கம்பளத்தைப் போர்த்திக் கொண்டு நின்ற குறுங் குன்றங்களும், அவற்றில் குதித்தோடும் வெள்ளி உருக்கனைய நீரோடைகளும், அங்குமிங்கும் தலைகளை அசைத்துக் கொண்டு மேய்ந்து கொண்டிருந்த செம்மறித் திரள்களும் மூரின் மனத்தை அப்படியே கவர்ந்து விட்டன.

'ஆகா! எத்துணை அழகான காட்சி பாருங்கள்; ஐந்து நிமிடங்கள் இதனைப் பார்த்துக் கொண்டிருப்பதற்கு நான் ஐந்து பவுன் கூடக் கொடுக்கத் தயங்க மாட்டேன்' என்றார் அவர். அவ்வளவுதான், அடுத்த கணமே ஆலிவர் கெகார்டி எழுந்து அபாயச் சங்கிலியைப் பிடித்திழுத்து விட்டு கூறினார், 'ஐந்து நிமிடங்கள் என்ன? பத்து நிமிடங்கள் கூடப் பார்த்து விட்டு அபராதத் தொகை ஐந்து பவுனைக் கட்டி விடுங்கள்' என்று.

## காதலிக்கு அனுப்பிய பரிசு

ஓர் இளைஞன் தன் காதலிக்கு அவளின் பிறந்த நாளன்று அவளுக்கு எத்தனை வயதாகிறதோ அத்தனை ரோஜா மலர்கள் அனுப்பி வைப்பதாக வாக்களித்தான். அதன்படியே பூக்கடைக்காரரிடம் சென்று அவளின் முகவரியைக் கொடுத்து, 'இங்கு இருபது ரோஜா மலர்கள் அனுப்பி விடு' என்று கூறி அதற்கான கட்டணத்தைக் கட்டினான்.

அந்தப் பூக்கடைக்காரருக்கு அவன் ஒரு நல்ல வாடிக்கைக் காரனாகத் தோன்றியது, 'பத்துப் பூ கூடப் போட்டு அனுப்பி வை!' என்று கூறி விட்டார் தம் ஊழியனிடம். ஊழியனும் அவ்விதமே செய்து விட்டான். வந்ததே ஆபத்து. அவள் அந்த இளைஞனின் காதலையே துறந்து விட்டாள்.

## பால்பனின் திறமை

முஸ்லிம் அரசர் ஒருவரின் மந்திரியாயிருந்த பால்பன் ஆட்சித் திறனும் அறிவுத் திறனும் பெற்றவர். அவர் ஓர் ஏழைப் பெற்றோருக்குப் பிறந்தவர். ஏழைச் சிறுவரான அவரை அடிமை வணிகர் சிலர் கடத்திக் கொண்டு வந்து டில்லி சுல்தான் முன் நிறுத்தினார்கள். பால்பன் அழகாக இல்லாதிருப்பதைக் கண்டு சுல்தான் அவரை விலை கொடுத்து வாங்க விரும்பவில்லை.

பால்பனுக்குப் பெரும் ஏமாற்றமாய்ப் போய் விட்டது. 'ஆலம் பனாஹ்! மற்றவர்களையெல்லாம் எதற்காக வாங்கினீர்கள்?' என்று கேட்டார் பால்பன். 'எனக்காகத் தான்' என்றார் மன்னர். 'என் ஒருவனை ஆண்டவனுக்காக வாங்கிக் கொள்ளக் கூடாதா?' என்று பால்பன் கேட்டதும் மன்னர் மனம் நெகிழ்ந்து விட்டது.

## மிகைப்படுத்துதல்

கமால் அத்தா துர்க்கின் மாளிகையில் ஒரு விருந்து நடந்தது. அதற்கு அயல் நாட்டுத் தூதுவர்கள் பலரும் வந்திருந்தார்கள். அத்தா துர்க்கின் விருந்தென்றால் கேட்க வேண்டுமா? வேடிக்கையும் கேளிக்கையும் அமளிபட்டுக் கொண்டிருந்தது. அத்தா துர்க் வந்தார். அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது. அயல் நாட்டுத் தூதுவர்கள் இருந்த பக்கம் வந்தார். அவர் பிரஞ்சுத் தூதரைக் கண்டதும் தம் கையிலிருந்த ஒரு பத்திரிகையைக் காட்டி, 'இது அளவுக்கு மீறிப் போவதாகும். உங்கள் நாட்டுப் பத்திரிகைகள் அளவுக்கதிகமாய் என் உடல் நிலையை மிகைப்படுத்தி எழுதியிருக்கின்றன. நான் இறந்து கொண்டிருப்பதாய் அவை எழுதியிருக்கின்றன. உங்களுக்கு நான் ஒன்று சொல்லுகிறேன், நான் இறந்து விட்டால் என் இடத்தை நிரப்ப ஆயிரம் துருக்கியர்கள் ஆயத்தமாயிருப்பார்கள்' என்றார் ஆத்திரத்துடன்.

பிரஞ்சுத் தூதுவருக்கு என்ன பதில் சொல்வதென்றே தோன்றவில்லை. விருந்து மன்றம் எங்கும் ஒரே அமைதி. பிரிட்டிஷ் தூதர் தாம் துணிச்சலுடன் சிரித்துக் கொண்டு கூறினார்: ‘ஜனாதிபதி அவர்களே! நீங்களும் தான் மிகைப்படுத்துகிறீர்கள்’ என்று.

கமால் சிரித்து விட்டு, ‘துவங்கட்டும் விருந்து’ என்றார்.

## கோட்டு விற்பனை

பிரின்ஸ்டன் பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்த ஒரு மாணவனுக்கு மாதத்தின் மூன்றாம் நாளே பணத் தட்டுப்பாடு ஏற்பட்டது. பெற்றோருக்கு எழுதினால் வசவுதான் கிடைக்குமென்பது அவனுக்குத் தெரியும். எனவே பல்கலைக் கழகப் பத்திரிகையில், ‘விற்பனைக்கு நல்ல கோட்டு ஒன்று உள்ளது. விலை 5 டாலர்கள்தாம். சைஸ் 41, உயர்தரத் துணி, தேவைப்பட்டோர் 312, வாக்கல் ஹாலுக்கு எழுதவும்’ என்று ஒரு விளம்பரம் கொடுத்தான். இரண்டு நாள் கழித்து நியூயார்க்கிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் அந்த விளம்பரத்தாளுடன் 15 டாலர்களும் இருந்தன. அதிலிருந்த ஒரு சிறு குறிப்பில், ‘நான் அந்தக் கோட்டை வாங்கிக் கொள்கிறேன். இப்படிக்கு உன் அன்புள்ள தாயார்’ என்று எழுதப்பட்டிருந்தது.

## மனைவியைத் தெரிந்து கொள்ளாத கணவர்

1940 - ஆம் ஆண்டில் அமெரிக்க ஜனாதிபதித் தேர்தல் நடக்கவிருந்தது. வெண்டல் வில்கி ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டை எதிர்த்துக் கடும் பிரச்சாரம் செய்தார். நாடு நகரமெல்லாம் சக்கரமாய்ச் சுழன்று பிரச்சாரம் செய்துவிட்டு ஒரு நாள் அவர் தேர்தல் அலுவலகம் ஒன்றிலிருந்து வெளியேறினார். அவரை வரவேற்க வந்திருந்த கூட்டம் அப்படியே சூழ்ந்து கொண்டு விட்டது. எத்தனையோ பேர் அவரிடம் கை குலுக்க

வேண்டுமென்று நெருக்கியடித்துக் கொண்டு நின்றார்கள். அப்பொழுது ஒரு பெண்மணி அவருடன் எப்படியோ கை குலுக்கி விட்டாள்.

'வெண்டல்! என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு?' என்று கேட்டாள் அவள். வில்கி விழித்தார். ஒரு சில நிமிடங்களில் அவளை இனம் கண்டு கொண்டு அப்படியே கட்டியணைத்துக் கொண்டார். கூட்டத்தினருக்கு ஒரே வியப்பு, 'யார் அவள்' என்று? உண்மையில் அவர் மனைவிதான் அவள்.

## கூழ்முட்டை வரவேற்பு

மார்க் ட்வெய்ன் ஒரு முறை சொற்பொழிவு செய்வதற்காக க்வேஷ் நகருக்கு வந்திருந்தார். அவரின் அபிமானிகள் 'டெம்பரென்ஸ் ஹாலி'ல் அவருக்காகப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். அறையுள் முடங்கிக் கிடக்கப் பிடிக்கவில்லை மார்க் ட்வெய்னுக்கு, 'நம் சொற்பொழிவை மக்கள் எவ்வாறு வரவேற்கிறார்கள் என்பதை அறிந்து வருவோமே' என்று கிளம்பினார்.

அவர் சென்ற வழியில் ஒரு மளிகைக் கடையிருந்தது. 'வணக்கம் நண்பரே!' என்று கூறிக் கொண்டே கடையுள் நுழைந்தார்; 'நான் ஊருக்குப் புதியவன்; சாயங்காலம் ஏதேனும் வேடிக்கை விளையாட்டு உண்டா இவ்வூரில்? அப்படி ஏதேனும் இருந்தால் மாலை நேரத்தைக் கொஞ்சம் கழிக்கலாமே என்று பார்க்கிறேன்' என்றார்.

பொருட்களை அடுக்கிக் கொண்டிருந்த அந்த மளிகைக் கடைக்காரன் மார்க் ட்வெய்னை ஏறிட்டுப் பார்த்துக் கூறினான், 'இன்றைக்கு ஏதேனும் சொற்பொழிவு நடக்குமென்று நினைக்கிறேன். இன்று முழுவதும் முட்டைகள்தாம் அதிகமாய் விற்பனையாகிக் கொண்டிருந்தன' என்று.

## அனன்ட்ஸனின் நற்சான்று

துருவப் பிராந்தியங்களைக் கண்டு பிடிப்பதற்குச் செல்வதற்கு முன் அனன்ட்ஸன் நன்கு உழைக்கக் கூடிய ஒரு ஜோடி சப்பாத்துக்களை ஒரு கடையிலிருந்து வாங்கிக் கொண்டார். பல காலம் துருவப் பிராந்தியங்களையெல்லாம் சுற்றிப் பார்த்து விட்டு நாடு திரும்பினார் அவர்.

ஒரு நாள் அவரை, அவருக்குச் சப்பாத்துக்கள் விற்ற கடைக்காரர் கண்டு கொண்டு விட்டார். 'எப்படி நம் சப்பாத்துக்கள் உழைத்தன?' என்று கேட்டு விட்டு மறுமொழியை எதிர்பாராமலே, 'ஒரு நற்சான்றுப் பத்திரம் எழுதித் தரவேண்டும்' என்றார். தம் உற்பத்திப் பொருள் மீது அத்துணை நம்பிக்கை போலும் அவருக்கு.

அனன்ட்ஸன் அங்கேயே உட்கார்ந்து அப்பொழுதே எழுதிக் கொடுத்தார். 'என் பயணத்தில் நான் சாப்பிட்ட சப்பாத்துக் களிலெல்லாம் இவ்வாண்டு இன்னாரிடம் வாங்கிய சப்பாத்துக்களே சிறப்பானவை என்று நான் உறுதிமொழி அளிக்கிறேன்' என்று. நற்சான்று மொழிப் பத்திரத்தை வாங்கிப் பார்த்த கடைக்காரர் விழித்தார். அவருக்கு எப்படித் தெரியும் அனன்ட்ஸன் துருவப் பிராந்தியத்தில் உணவுப் பொருள் தட்டிப் போனபோது அந்தச் சப்பாத்தையே சுட்டுச் சாப்பிட்டதைத்தான் குறிப்பிடுகிறார் என்று.

## ஒன் சைட் பேப்பர்

அப்பொழுது மார்க் ட்வெய்ன் ஒரு பத்திரிகையில் ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். அந்தப் பத்திரிகையோ கடன்வாய்ப்பட்டு இன்று நின்று விடும், நாளை நின்று விடும் என்று கூறுமளவில் இருந்தது. கடன்காரர் களெல்லாம் நெருக்கத் துவங்கி விட்டார்கள். ஒவ்வொரு நாளும்

கொடுபட வேண்டிய 'பில்'கள் வந்து குவிந்து கொண்டே யிருந்தன. மார்க் ட்வெய்னும் நிலைமையோடு போராடிக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் அவர் ஒரு 'பில்'லைப் பாராமலே தள்ளியபோது அலுவலகப் பையன் குறுக்கிட்டு, 'என்ன ஐயா, இப்படித் தள்ளி விட்டீர்கள். அதன் பின்புறத்தைப் பார்த்தீர்களா? உடனே பணத்தை அனுப்பி வைக்கும்படியும், இல்லாவிட்டால் வழக்குத் தொடரப்படும் என்றும் எழுதியிருக்கிறதே?' என்றான். மார்க் ட்வெய்ன் அவனை ஏறிட்டுப் பார்த்தார், 'இந்த மாதிரி 'பில்'களை என்ன செய்வதென்று உனக்குத் தெரியாதா? பார்த்தாயா இதை, 'இரண்டு பக்கமும் எழுதப்பட்டுள்ள கையெழுத்துப் பிரதிகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா' என்பதுதான் நம் பத்திரிகை அலுவலக விதியாயிற்றே?' என்றார். 'இதற்குமா?' என்றான் பையன். 'ஆமாம்' என்றார் மார்க் ட்வெய்ன்.

## பேசும் இயந்திரமும், நிறுத்தும் இயந்திரமும்

தாமஸ் ஆல்வா எடிசன் ஒரு விருந்திற்குச் சென்றிருந்தார். அப்பொழுது அவரை மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தும்போது விருந்து வைத்த சீமாட்டி அவரின் பலவிதக் கண்டுபிடிப்புகளைப் பற்றி வெகுவாகப் பாராட்டினார். எடிஸன் தாம் பேசும் இயந்திரத்தையே கண்டுபிடித்தார் என்று கூறிவிட்டு அவரைப் பற்றியும் அவரின் பேசும் இயந்திரத்தைப் பற்றியும் அவள் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டே இருந்தாள். எடிஸனுக்குப் பொறுமை தவறி விட்டது, எழுந்தார். 'என்னைப் பாராட்டியதற்காகச் சீமாட்டி அவர்களுக்கு நான் மிகவும் நன்றி செலுத்துகிறேன். ஆனால் அவர்கள் கூறியதில் ஒரு சிறு தவறு. அதனை நான் திருத்த வேண்டியது அவசியம். பேசும் இயந்திரத்தைக் கண்டுபிடித்தவன் நான் என்றார் அவர். ஆனால், உண்மையில் பேசும் இயந்திரத்தைக் கண்டு பிடித்தவன்

ஆண்டவன்தான். நான் கண்டுபிடித்ததெல்லாம் நினைத்ததும் நிறுத்தக் கூடிய இயந்திரத்தைத் தான்' என்றார்.

## நூஹ் கப்பல்

வண்டி பிளாட்பாரத்தில் நிற்கக் கண்டதும் அந்த இளைஞனுக்கு உயிர் வந்தாற்போலிருந்தது. மூட்டை முடிச்சுகளைத் தூக்கிக் கொண்டு ஏறப் போனான் அவன். 'நல்லவேளை இரயிலைப் பிடித்து விட்டோமே' என்னும் நினைப்பில் அவனுக்கு நகைச்சுவை பீறிட்டு விட்டது போலும், 'என்ன நூஹ் கப்பல் நிறைந்து விட்டதோ?' என்றான். உள்ளே புழுக்கத்திலும் நெருக்கத்திலும் அகப்பட்டுக் கொண்டிருந்த ஒருவருக்கு ஆத்திரம் வந்து விட்டது. 'ஆமாம். ஆனால் கழுதை ஒன்றுதான் பாக்கி, ஏறு உள்ளே!' என்றார் அவர்.

## தனித்த தீவில்

ஒரு நாள் மாலை புகழ் பெற்ற ஆங்கில எழுத்தாளர்கள் பலர் ஓரிடத்தில் அமர்ந்து பல விஷயங்கள் பற்றி உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஜி.கே. செஸ்டர்டன் எல்லோரையும் பார்த்து ஒரு கேள்வியைப் போட்டார். அதாவது, 'உங்களை ஒருவருமில்லாத தனித் தீவில் விட்டு விடுவதாகக் கொள்ளுவோம். அப்பொழுது நீங்கள் என்ன புத்தகம் உங்கள் வசம் இருக்க வேண்டும் என்று விரும்புவீர்கள்?' என்பதுதான் அது.

உடனே ஓர் எழுத்தாளர், 'ஷேக்ஸ்பியர் நாடகங்களின் முழுத் தொகுப்பு ஒன்று இருக்க வேண்டும் என்பதுதான் என் விருப்பமாகும்' என்றார். 'நான் பைபிள் தான் இருக்க வேண்டும் என்று விரும்புவேன்' என்றார் இன்னொருவர்.

மற்றொருவர் செஸ்டர்டனைப் பார்த்து, 'சரி, நீங்கள் எதைத் தேர்ந்தெடுப்பீர்கள்? சொல்லுங்கள்' என்று கேட்டார். உடனே

செஸ்டர்டன் கூறினார்: 'தாமஸ் எழுதிய 'கப்பல் கட்டும் முறை' என்னும் நூலே அப்பொழுது என் கைவசம் இருக்க வேண்டும் என்று விரும்புவேன்.'

## கடவுளுக்கு நன்றி

ஸ்டாலின் கிராடுப் போர் நடந்து கொண்டிருந்தபோது ஜெர்மானியர்களுக்கு ஒரு சிறு வெற்றி கிடைத்தது. அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர் இரு ஜெர்மன் வீரர்கள். 'இந்த வெற்றி கிட்டியதற்காக கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்' என்றான் ஒருவன்.

'கடவுளுக்கு ஏன், ஹிட்லருக்கு நன்றி செலுத்த வேண்டுமென்று கூறு' என்றான் மற்றவன். 'ஹிட்லர் இறந்து விட்டாரானால் பிறகு யாருக்கு நன்றி செலுத்துவது ?' என்று முதலாம் வீரன் கேட்டான்.

'கடவுளுக்கு' என்றான் இரண்டாம் வீரன், தன் பதிலிலுள்ள மாறுபட்ட பொருளைப் புரியாமல்.

## சர்ச்சிலை ஏமாற்றிய நிருபர்

நீண்ட நேரத்திற்குப் பின் ஒரு நாள் அமெரிக்க நிருபர் ஒருவருக்குப் பேட்டியளித்தார் வின்ஸ்டன் சர்ச்சில். 'இன்று காலையில் மட்டும் ஏழெட்டு நிருபர்களுக்குப் பேட்டியளிக்க மறுத்து விட்டேன். இன்று அளிக்கப்படும் முதல் பேட்டி உமக்குத்தான்' என்று கூறி விட்டுச் சர்ச்சில் தம் மேஜை மீது கிடந்த ஏழெட்டு விசிட்டிங் கார்டுகளையும் எடுத்து அந்த நிருபருக்குக் காட்டினார். 'எனக்குத் தெரியும்' என்றார் அந்த நிருபர்.

சர்ச்சில் ஏறிட்டுப் பார்த்தார். 'அந்த ஏழெட்டுக் கார்டுகளையும் அனுப்பியவன் நான் தான்' என்று நிருபர் கூறினார். சர்ச்சில் சிரித்தார்.

## ஆசிரியரை மடக்கிய மாணவன்

சுப்ரீம் கோர்ட் நீதிபதியாயிருந்த லூயி பிராண்டிர்ஸுக்கு அப்பொழுது பதினாறு வயதிருக்கும். அவரை அவருடைய பெற்றோர்கள் ஐரோப்பாவிற்கு அழைத்துச் சென்று அங்கு ட்ரஸ்டெனிலுள்ள பள்ளியில் சேர்க்க முயன்றார்கள். கொண்டுகியிலிருந்து வந்த அந்தச் சிறுவரைச் சேர்த்துக் கொள்ளுமுன் அந்தப் பள்ளித் தலைமையாசிரியர் பிறப்பு சர்டிபிகேட்டும், அம்மைத் தடுப்பு ஊசி போட்டுக் கொண்டதற்கான சர்டிபிகேட்டும் கேட்டார். அந்த இரண்டு வகைச் சர்டிபிகேட்டுகளும் பிராண்டிர்ஸிடம் இல்லை. அதற்குப் பதிலாகத் துடுக்கான நாவுதான் இருந்தது.

'உங்களுக்கெதற்காக இந்தச் சர்டிபிகேட்டுகள் வேண்டும்?' என்று கேட்டார் அந்த சிறுவர். 'ஆதாரத்திற்குத்தான்' என்றார் தலைமை ஆசிரியர். 'நான் அம்மை குத்திக் கொண்டிருக்கிறேனா என்பதற்கு நீங்கள் என் கையை அல்லவா ஆதாரத்திற்குப் பார்த்திருக்க வேண்டும்?'

'அடுத்தபடியாக உங்களுக்கு என் கையைக் காட்டுவதற்கு நான் இங்கிருப்பது நான் பிறந்து விட்டேன் என்பதற்கு ஆதாரமில்லையா?' பையனின் கேள்வியைப் பார்த்துப் பள்ளித் தலைமை ஆசிரியர் அயர்ந்து போய் விட்டார். 'சரி, தம்பி! உன்னைச் சேர்த்துக் கொண்டோம், போ' என்றார் அவர்.

## பீர்பாலின் கணக்கு

ஒரு நாள் காலை, உணவருந்தி விட்டுப் பேரரசர் அக்பர் அவைக்குள் நுழைந்தார். அங்கு எதிரில் மந்திரி பீர்பாலைக் கண்டதும் அவருக்கு என்ன தோன்றியதோ, 'டில்லியிலுள்ள காகங்களின் எண்ணிக்கையை எடும்!' என்று ஆணையிட்டார். 'நான் ஏற்கனவே கணக்கிட்டு வைத்திருக்கிறேன் ஆலம்பனாஹ்' என்றார் பீர்பால். வியப்புடன் அக்பர் ஏறிட்டுப் பார்த்தார்.

'பொய் இல்லை, பிரபு. டில்லியில் மட்டும் அறுபதினாயிரத்து ஐந்நூற்று ஐம்பத்திரண்டு காகங்களிருக்கின்றன' என்றார் பீர்பால். 'எப்படி நீர் எல்லாக் காகங்களையும் கணக்கிட முடிந்தது? நீர் கூறிய கணக்கு கூடுதலாகவோ, குறைவாகவோ இருந்தால்......' அக்பர் கேட்டார். 'நான் கூறியதற்கு மேல் அதிகமாயிருந்தால் காகங்களின் நண்பர்களும், உறவினர்களும் விருந்தாட வந்திருக்கலாம் என்று எண்ணிக் கொள்ளுங்கள். நான் கூறியதைக் காட்டிலும் குறைவாக இருந்தால் காகங்களுள் சில தங்கள் நண்பர்களிடமோ, உறவினர்களிடமோ விருந்தாடிடச் சென்றிருக்கலாம் என்று கருதிக் கொள்ளுங்கள்' என்றார். மந்திரியின் கூற்றைக் கேட்டுப் பேரரசர் புன்முறுவலித்தார்.

## உண்மை முத்தும், பொய்ப் பல்லும்

ஒரு நாள் இங்கிலாந்தின் நகரமொன்றில் தோட்டக் கச்சேரி நடந்தது. அதற்கு வந்திருந்த பீல் சீமாட்டி பால் வண்ண முத்துக்கள் பல அணிந்திருந்தார். அவை சீமாட்டியின் சிவந்த அதரங்களுடன் சேர்ந்து சிரித்து விருந்து விழாவை அலங்கரித்துக் கொண்டிருந்தன. அப்பொழுது ஒரு பெண்மணி சீமாட்டியின் அருகில் சென்று, 'எவ்வளவு அழகாக இருக்கின்றன இந்த முத்துக்கள். இவையெல்லாம் உண்மையான முத்துக்களா ?' என்று கேட்டாள்.

'நிச்சயமாக உண்மையான முத்துக்கள் தாம். வேண்டுமானால் கடித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்களேன்.'

பீல் சீமாட்டி இப்படிச் சொன்னதும், 'எங்கே பார்க்கலாம்' என்று அந்தப் பெண்மணி அருகே வந்து விட்டாள்.

'ஐயையோ ! உண்மையான முத்துக்களைப் பொய்ப் பற்களால் கடித்துப் பார்த்துக் கூற முடியாதே ?' என்று பீல் சீமாட்டி கூறியபோது அந்தப் பெண்மணியின் முகத்தில் அசடு வழிந்தது.

## போப்பாண்டவரின் போதனை

முன்பு போப்பாண்டவராயிருந்த ஜான் அவர்கள் ஒரு நாள் பாரசூட் வீரர்களுக்கு ஆலோசனை கூற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவர் கூறினார், 'நீங்கள் வானிலிருந்து குதிப்பது சரி, ஆனால் நீங்கள் வானிற்கு உயர வேண்டுமென்பதை எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்' என்று.

## மன்னரை ஏமாற்றிய சிறுவன்

டென்மார்க் மன்னர் கிரிஸ்டியன் அப்பொழுது இளைஞர். அவர் ஒரு நாள் புரவியில் ஏறிக் கொண்டு எங்கோ கிளம்பி விட்டார். நீண்ட நேரம் பயணம் செய்ததால் அவருக்கு நீர் வேட்கை ஏற்பட்டு விட்டது. சுற்றுமுற்றும் பார்த்தார். பக்கத்தில் ஒரு வீடு இருப்பது தெரிந்தது. குதிரையை விட்டிறங்கி அந்தப் பக்கம் வந்த பையனைப் பார்த்து, 'தம்பீ !' என்றழைத்தார். பையன் வந்தான். 'கொஞ்சம் இந்தக் குதிரையைப் பார்த்துக் கொள்கிறாயா ? இதோ வந்து விடுகிறேன்' என்றார் இளவரசர்.

பையன் குதிரையை ஒரு மாதிரியாகப் பார்த்து, 'உங்கள் குதிரை கடிக்குமோ ?' என்று கேட்டான். 'கடிக்காது, இது மிகவும் சாதுவான குதிரை' என்றார் இளவரசர். 'அப்படியென்றால் உதைக்குமோ ?' என வினவினான்.

'ஊஹூம்; உதைக்காது' என்றார் இளவரசர். 'ஓடுமோ ?' என்றான் சிறுவன். 'ஓடாது; உனக்கு அந்தப் பயமே வேண்டாம்.' சிறுவன் அவரை ஏறிட்டுப் பார்த்தான். 'அவ்வாறாயின் இதை ஏன் பிடித்துக் கொண்டு நிற்கச் சொல்கிறீர்கள் வேலை மெனக்கெட்டு' என்று கேட்டு விட்டுப் பையன் எடுத்தானே ஓட்டம்.

# சர்.சி.பி. ஐயர் செய்த வேலை

ஒரு நாள் சர்.சி.பி. ராமசாமி ஐயர் இரு ஆங்கிலேயர்களுடன் முதல் வகுப்புப் பெட்டி ஒன்றில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவர் பஞ்ச கச்சம் கட்டித் தலைப்பாகை வைத்துக் கொண்டிருப்பது அந்த ஆங்கிலேயர்களுக்குப் பிடிக்கவில்லை. என்றாலும், ஒன்றும் செய்ய முடியாமல் உட்கார்ந்திருந்தனர். சிறிது நேரம் கழித்து சி.பி. ஐயர் சிறுநீர் கழிப்பதற்காகக் கக்கூசிற்குச் சென்றார். சென்று விட்டு வந்தவர், தாம் கழற்றி வைத்து விட்டுப் போன தம் தலைப்பாகையைக் காணாது வியப்புற்றார். பெட்டியில் அந்த ஆங்கிலேயர்களைத் தவிர்த்து வேறு எவருமிலர். வண்டியும் எங்கும் நிற்கவில்லை.

அந்த ஆங்கிலேயர்களைப் பார்த்து சி.பி. கேட்டார், 'எங்கே என் தலைப்பாகை?' என்று. அவர்கள், 'எங்களுக்குத் தெரியாது' என்று கையை விரித்து விட்டார்கள். சி. பி. யும் பேசாமல் இருந்து விட்டார். சில கணங்களில் அந்த இரு ஆங்கிலேயரும் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு கக்கூஸ் பக்கம் சென்றார்கள். வண்டி வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. சி. பி. மெள்ள எழுந்து அவர்கள் இருவரின் தொப்பியையும் எடுத்து ஜன்னல் வழியே வீசி எறிந்தார்.

ஆங்கிலேயர்கள் வந்தனர்; தங்கள் தொப்பிகளைக் காணாமல் விழித்தனர். சி. பி. யைப் பார்த்து, 'எங்கே எங்கள் தொப்பி?' என்று சற்று அதட்டலாகக் கேட்டனர். சி. பி. சிறிதும் அஞ்சாமல், 'என் தலைப்பாகையைத் தேடிப் போயிருக்கின்றன' என்றார் அமைதியாக. அப்பொழுதல்லவா பார்க்க வேண்டும் அவ்விரு ஆங்கிலேயரின் முகத்தை?

## கல்விப் பிரச்சாரகரின் அவசியம்

மக்களிடையில் கல்வியைப் பரப்புவதையே தம் வாழ்வின் வேலையாகக் கொண்டு பிரச்சாரம் செய்து வந்த பிரான்ஸீஸ் பார்க்கர் என்பவர் ஒரு சிற்றூருக்கு வந்தார். அங்கும் அவர் கல்வியின் அவசியத்தை எடுத்து விளக்கிப் பேசினார். அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த பெண்மணி ஒருவர் அவரை அணுகி, 'என் குழந்தைக்கு எப்பொழுதுதான் கல்வி கற்பிக்கத் துவங்கலாம்?' என்று கேட்டார்.

'உங்கள் குழந்தை பிறந்து விட்டதா? இன்னும் பிறக்கவில்லையா?' என்று கேட்டார் பிரான்ஸீஸ் பார்க்கர். 'பிறந்தும் விட்டது; வயதும் ஐந்தாகிறது' என்றார் அந்தப் பெண்மணி. அவ்வளவுதான் பிரான்ஸீஸ் பார்க்கர். 'அடக் கடவுளே!' என்று கத்தினார். 'என்னுடன் பேசிக் கொண்டு இங்கு நிற்காதீர்கள், ஓடுங்கள் உங்கள் வீட்டிற்கு. ஏற்கனவே ஐந்தாண்டுகளை வீணாக்கி விட்டீர்களே?' என்று விரட்டினார்.

## கையெழுத்தின் கதி

ஹொரேஸ் கிரீலியின் கையெழுத்து மிகவும் மோசமாகயிருக்கும். பைரன் பிரபுவைப் போல அவர் எழுதிய கையெழுத்தை அவரால் கூடச் சில வேளைகளில் படிக்க இயலுவதில்லை. ஒரு நாள் கிரீலி அதே ஊரிலிருந்த மற்றோர் ஆசிரியருக்கு ஒரு குறிப்பு எழுதி அனுப்பி வைத்தார். வேலையாள் அதனை எடுத்துக் கொண்டு போனான். அந்த ஆசிரியர் கடிதத்தை வாங்கிப் படிக்க முயன்றார், அவரால் முடியவில்லை. கண்ணாடியைப் போட்டுக் கொண்டு பார்த்தார், கண்ணாடியைக் கழற்றி வைத்துப் பார்த்தார், பக்கத்தில் வைத்துப் பார்த்தார், தொலைவில் பிடித்துப் பார்த்தார். ஊஹூம்! ஒரு சொல் கூடச் சரியாகத் தெரியவில்லை. அவருக்கு அயர்ந்து போய் விட்டது. கடிதத்தை ஹொரேஸ் கிரீலிக்கே திருப்பி அனுப்பினார்.

வேலையாள் அக்கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்ததும் நாம் அனுப்பிய குறிப்பிற்குப் பதில்தான் அது என்று தவறுதலாக எண்ணிக் கொண்டார் கிரீ லி. அப்படியும் இப்படியும் பிடித்து அவரும் படிக்க முயன்றார். ஓர் எழுத்துக் கூடப் பிடிபடவில்லை. வேலையாளைச் சினத்துடன் பார்த்து, 'என்னப்பா இது; ஒன்றுமே புரியவில்லை. என்னதான் அந்த மனிதர் சொல்ல நினைக்கிறார்?' என்றார்.

'இதையே தான் அவரும் கேட்கிறார்' என்றான் வேலையாள் அமைதியாக.

## மன்னரும், துறவியும்

இப்ராஹீம் இப்னு அத்ஹம் 'ஹஜ்' செய்வதற்காக மக்கா செல்லும் வழியில் ஓரிடத்தில் கூடாரமடித்துத் தங்கினார். கூடாரம் தங்க முளைகளில் கட்டப்பட்டிருந்தது. அவ்வழியாக வந்த துறவி ஒருவருக்கு அந்த ஆடம்பரம் சிறிதும் பிடிக்கவில்லை. 'புனித யாத்திரை இப்படித்தான் செய்வதோ?' என்று அவர் ஆத்திரத்துடன் கேட்டார் இப்ராஹீமைப் பார்த்து. இப்ராஹீம் பதில் கூறவில்லை.

அடுத்த நாள் பரிவாரங்கள் அங்கிருந்து கிளம்பின. கூடாரங்கள் பிரிக்கப்பட்டுச் சுருட்டிக் கட்டப்பட்டன. ஆனால் தங்க முளைகளை அப்படியே விட்டு விட்டுக் கிளம்பி விட்டனர். எல்லோரும் மக்கா நகர் நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். கூட்டத்தில் வந்து கொண்டிருந்த துறவி, 'கொஞ்சம் நில்லுங்கள்! இதோ வந்து விடுகிறேன்' என்று கத்திக் கொண்டே ஓடினார். 'எங்கே போகிறீர்கள்?' என்று கேட்டார் இப்ராஹீம். 'என் குவளை ஒன்றை விட்டு வந்து விட்டேன்' என்று நின்று கூடச் சொல்லாமல் ஓடினார் அவர்.

சில கணங்களில் துறவி தம் குவளையுடன் வந்து சேர்ந்தார். இப்ராஹீம், அவரைப் பார்த்து, 'தங்க முளைகளையே

விட்டு விட்டு நான் கவலையின்றி வருகிறேனே? எல்லாம் துறந்ததாகக் கூறும் தங்களுக்கு கேவலம் ஒரு குவளையை விட்டு வர மனமில்லையே?' என்றார். துறவியின் முகம் நிமிரவேயில்லை.

## 'பேண்ட்' பார்சல்

சர். டி. விஜயராகவாச்சாரியார் அவர்கள் அப்பொழுது தஞ்சாவூர் கலெக்டராக இருந்தார். ஒவ்வொரு நாளும் அவருக்குத் தஞ்சாவூர் முனிஸிபாலிட்டியின் திறமையின்மையைப் பற்றி கடிதங்களுக்கு மேல் கடிதங்கள் வந்து குவிந்து கொண்டேயிருந்தன. அவற்றைப் பார்த்து அவருக்கும் அலுத்துப் போய் விட்டது. தெருக்கள் சுத்தமாய் இல்லையென்றும், சாக்கடைகள் சரியாயில்லை யென்றும், பொது சுகாதாரம் நிரம்ப மோசமாயிருக்கிறதென்றும் வந்த கடிதங்கள் கொஞ்சமா, நஞ்சமா?

விஜயராகவாச்சாரியார் தாமே நேரில் சென்று பார்ப்பதென்று ஒரு நாள் கிளம்பினார். சந்துகளிலும், பொந்துகளிலும் புகுந்து பார்த்தார். குற்றச்சாட்டுகள் ஒன்றும் பொய்யில்லை என தெரிந்து விட்டது அவருக்கு. தெருக்களில்தாம் கணுக்காலளவு புழுதி படிந்திருந்ததே, எங்கு பார்த்தாலும் ஒரே குப்பையும் கூளமும் தாம்.

சுற்றிப் பார்த்த பின் நேராக வீட்டிற்கு வந்து தம் 'பேண்டை'க் கழற்றி அத்துடன் ஒரு குறிப்பும் சேர்த்து அனுப்பி வைத்தார் முனிஸிபல் ஆபீஸிற்கு. அந்தக் குறிப்பில் இருந்தது இதுதான்.

'தெருவின் அசுத்தத்திற்கு ஆதாரம் 'பேண்ட்' தான்.'

அடுத்த நாள் முதல் நகரத் தெருக்கள் சுத்தமடைந்து விட்டன.

## ஹ்யூகோவின் கேள்வியும், வெளியீட்டாளரின் பதிலும்

அப்பொழுதுதான் வெளி வந்திருந்தது 'ஏழை படும்பாடு' எனும் விக்டர் ஹ்யூகோவின் நவீனம். அதன் விற்பனை எப்படி இருக்கிறது என்று அறிய விரும்பினார் அவர். ஆனால், அவருக்கிருந்த வேலையில் வெளியீட்டாளருக்குக் கடிதம் கூட எழுத இயலவில்லை. எனவே, ஒரு போஸ்ட் கார்டை எடுத்து ஒரு கேள்விக்குறி '?'யை மட்டும் போட்டு அனுப்பி வைத்தார்.

மறுநாளே வெளியீட்டாளரிடமிருந்து பதில் வந்தது. அதுவும் ஒரு போஸ்ட் கார்டுதான். விக்டர் ஹ்யூகோ ஆவலுடன் பார்த்தார் அதனை. அதில் ஆச்சரியக்குறி '!' மட்டுமே பொறிக்கப்பட்டிருந்தது.

## அமெரிக்கர் பற்றிய ஷாவின் கருத்து

அமெரிக்காவின் அதிசயப் பெண்மணியான ஹெலன் கெல்லரை கௌரவிக்கும் முறையில் விருந்தொன்று நடைபெற்றது, அதற்கு ஜார்ஜ் பெர்னார்ட்ஷாவும் சென்றிருந்தார். ஹெலன் கெல்லர் விருந்து மன்றத்திற்குள் நுழைந்ததும் ஆஸ்டர் சீமாட்டி பெர்னாட்ஷாவின் காதோடு காதாக 'அவரைத் தெரியுமல்லவா ? கண்ணும் குருடு, காதும் கேளாது' என்றார் மெதுவாக.

உடனே பெர்னார்ட்ஷா, 'எல்லா அமெரிக்கர்களும் அப்படித்தானே இருக்கிறார்கள்' என்றார் கண்களில் கேலி மின்ன.

## எப்பொழுது? இப்பொழுது!

ஜெனரல் ஆர்டே சி. விங்கேட்டுக்கு அப்பொழுது வயது முப்பதிருக்கும். அவர் ஒரு நாள் கப்பல் தளமொன்றில் நின்று கொண்டிருந்தபொழுது பதினைந்தே வயதடைந்த இள நங்கையொருத்தி அவரை நோக்கி வந்தாள். அவள் ஸ்காட்லாந்தைச் சேர்ந்தவள். வந்தவள் விங்கேட்டைப் பார்த்து, 'நான் உங்களைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்' என்றாள்.

விங்கேட் அவளை ஏறிட்டுப் பார்த்தார், அழகே உருவாக அவள் நின்று கொண்டிருந்தாள். அவளின் கரு நீல விழிகளும் கனகக் குழலும் அவரை அப்படியே கவர்ந்து விட்டன. 'எப்பொழுது ?' என்று மட்டும்தான் கேட்டார் அவளை. அவள் பதில் சொல்லவில்லை. இரண்டாண்டுகளுக்குப் பின் அவளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் எழுதப்பட்டிருந்தது இதுதான், 'இப்பொழுது!'

## பெண்ணின் பெருமை

ராபியா பஸ்ரீ என்பவர் சிறந்த முஸ்லிம் ஞானி (ஸூஃபி), அவர் ஒரு பெண். நண்பர்கள் ஒரு நாள் அவரிடம் 'என்ன இருந்தாலும் நீங்கள் பெண் தானே, இறைவன் தன் தூதர்களாய் ஆண்களைத் தானே அனுப்பி வைத்தான், பெண்களின் பலவீனத்தைத் தெரிந்து தானே அவன் அவர்களைத் தன் தூதர்களாய் அனுப்பவில்லை' என்றார்கள்.

உடனே ராபியா, 'ஆனால் அந்தத் தூதர்களைப் பெறுவதற்கு இறைவன் பெண்களைத்தான் தேர்ந்தெடுத்தான், எந்த ஆணையும் அதற்குத் தகுந்தவரென்று அவன் தேர்ந்தெடுக்கவில்லை' என்றார். நண்பர்கள் வாயடைத்துப் போய் விட்டனர்.

## ஆஸ்கர் ஒய்ல்டின் கையெழுத்துப் பிரதி

ஆஸ்கர் ஒயில்ட் ஒரு முறை தாம் எழுதிய நவீனம் ஒன்றை அச்சிடுமாறு அச்சகம் ஒன்றிற்கு அனுப்பி வைத்தார். சில நாட்களில் நவீனத்தின் கையெழுத்து பிரதி அவருக்கே திரும்பி வந்தது.

ஆச்சரியத்துடனும் ஆத்திரத்துடனும் பார்சலைப் பிரித்துப் பார்த்தார் ஒய்ல்ட். அதில் ஒரு கடிதம் இருந்தது. அச்சக நிர்வாகிதான் எழுதியிருந்தார்: 'உங்கள் கையெழுத்துப் பிரதியில் கால் புள்ளி, அரைப் புள்ளி, முக்கால் புள்ளி, முழுப் புள்ளி, கேள்விக் குறி ஒன்றையுமே காணோம், தயவு செய்து அவற்றைப் போட்டனுப்பி வையுங்கள்' என்று.

உடனே ஆஸ்கர் ஒய்ல்டு ஒரு வெள்ளைத் தாளை எடுத்து அதில் நிறைய எல்லா வகையான குறிகளையும் போட்டு அதன் கீழே, 'நீங்கள் விரும்புகிறார் போல் இவற்றைப் பகிர்ந்து போட்டுக் கொள்ளுங்கள்' என்று எழுதியனுப்பினார்.

## இருவர் மட்டும் என் செய்வது?

பெர்னாட்ஷாவின் நாடகமான 'ஆயுதங்களும் மனிதனும்' என்பது அன்றுதான் இலண்டன் நகர அரங்கொன்றில் துவக்கம். ஷாவும் அதைப் பார்க்க வந்திருந்தார். ஆசிரியருக்கான இருக்கை அவருக்கு அளிக்கப்பட்டது. நாடகம் துவங்கியது. ஒருவன் எங்கோ ஒரு மூலையில் இருந்து கொண்டு, 'ஊ, ஒ' என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தான்.

இம்மாதிரிச் சூழ்நிலையை பெர்னார்ட்ஷாவுக்கா சமாளிக்கத் தெரியாது! நடுவில் எழுந்து நின்றார், 'ஐயா! கூச்சல் போடுகிறவரே! இந்த நாடகம் பற்றி நானும் உம் கருத்தைத்தான் கொண்டிருக்கிறேன். ஆனால் இத்தனை மக்களுக்கும் இடையில் நாம் இருவரும் என் செய்வது?' என்று

கேட்டு விட்டு அமர்ந்தார். அதன் பின் அவன் வாயைத் திறக்கவேயில்லை.

## ரோம்மலும், மாண்ட் கோமரியும்

ஜெர்மன் தளபதி ரோம்மல் மின்னல் வேகத்தில் டென்மார்க்கைக் கைப்பற்றி அதன் தலைநகரான கோப்பன்ஹேகன் தெரு வழியாக வெற்றி ஊர்வலம் வந்தார். டேனிஷ் மக்கள் தெருக்களில் திரண்டு நின்று அந்த வெற்றி ஊர்வலத்தைப் பார்த்தார்கள்தாம். ஆனால், அவர்களில் ஒருவர் முகத்தில் கூட ஈயாடவில்லை. அவர்களுக்கு எப்படி மகிழ்ச்சி ஏற்பட முடியும்? அந்நியன் ஒருவன் தங்கள் நாட்டைக் கைப்பற்றி அதன் நாயக நகரத் தெருக்கள் வழியாக வலம் வரும்போது? தங்கள் ஆற்றாமையை நினைத்து நெஞ்சம் அழிந்து கொண்டு நின்றார்கள். மகா வலிமையுடன் வல்லரசுகளின் வாலைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டிருந்த பகைவர்களை வலிகுன்றிய அவர்களால் என்ன செய்ய இயலும்?

ரோம்மல் தங்களைக் கடந்து சென்று விட்ட பின்னரும் கூடச் சில டேனிஷ்காரர்கள் தெருக்களில் நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது அப்பக்கம் வந்த ஜெர்மன் அதிகாரி ஒருவன், 'இன்னும் ஏன் இங்கேயே நின்று கொண்டிருக்கிறீர்கள்? ரோம்மல் இந்தப் பக்கம் மீண்டும் வரப் போவதில்லை' என்று கூறி அதட்டி அவர்களைக் கலைந்து போகுமாறு கட்டளையிட்டான்.

அதைக் கேட்டு ஆத்திரமடைந்த டேனிஷ்காரர் ஒருவர் கூறினார், 'நாங்கள் நேச தேசத் தளபதி மாண்ட் கோமரிக்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம்' என்று.

## தென் துருவத் தூதர்

ஒரு சமயம் பத்திரிகையாளர் சங்கமொன்றில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிற்கு ஒரு விருந்து அளிக்கப்பட்டது. அந்த விருந்தில் வைத்துப் பலர் அவரின் கையெழுத்துக் கேட்டுப் புத்தகங்களை நீட்டினார்கள். அவற்றில் எல்லாம் ஜனாதிபதியும் மளமளவெனக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துக் கொண்டேயிருந்தார்.

ஒரு பத்திரிகையாளருக்கு ஏதேனும் வேடிக்கை செய்ய வேண்டும் என்னும் எண்ணம் ஏற்பட்டது. தம் 'ஆட்டோகிராப்' நோட் புக்கை எடுத்து அதில், 'உம்மை வட துருவத்திற்கு அமெரிக்கத் தூதராய் நியமித்திருக்கிறேன்' என்று எழுதி ஜனாதிபதியிடம் கும்பலோடு கும்பலாக நீட்டினார்.

சில கணங்களில் ஜனாதிபதி அதனைத் திருப்பிக் கொடுத்தார். வகையாக மாட்டிக் கொண்டார் ஜனாதிபதி என்று ஒரே கொண்டாட்டம் அப்பத்திரிகையாளருக்கு. ஆவலுடன் தம் நோட் புக்கைத் திறந்தார். அதில் ஜனாதிபதியின் கையெழுத்திற்குப் பதிலாக, 'இனிஷியல்' மட்டும் தானிருந்தது. அத்துடன் ஒரு சிறு திருத்தமும், குறிப்பும் இருந்தது. வட துருவம் என்பதில் 'வட' என்னும் சொல் அடிக்கப்பட்டு அதன்மேல் 'தென்' என்று எழுதப்பட்டிருந்தது. குறிப்பில், 'வட துருவத்திற்கு ஏற்கனவே ஆள் போட்டாகி விட்டது' என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. பத்திரிகையாளர் முகத்தில் அசடு வழிந்தது.

## மார்க் ட்வெய்னின் தொடர் கதை

மார்க் ட்வெய்ன் எழுதிய 'ஆர்க் நகர ஜோன்' என்பது தொடர் கதையாக ஒரு பத்திரிகையில் வெளிவந்துக் கொண்டிருந்தது. கதை முடியும் வரை அதனை எழுதுகிறவரின் பெயரைக் குறிப்பிட வேண்டாமெனக் கேட்டுக் கொண்டார்

ட்வெய்ன். பத்திரிகை வெளியீட்டாளர்களும் இணங்கினர். இவ்விதம் அவர் செய்தது மக்களின் விருப்பு வெறுப்பற்ற கருத்தை அறிவதற்குத் தான். ஒரு நாள் மாலை விருந்தொன்றில் வைத்து ஸாஸிடெப்யூ என்னும் நண்பரைச் சந்தித்தார். அவரிடம் தம் கதை பற்றிக் கேட்டுப் பார்த்தால் என்ன என்று எண்ணினார் ட்வெய்ன்; ‘நீங்கள் நவீனங்கள் படிப்பது தானே?’ என்று கேட்டார்.

‘ஏன், நிச்சயமாகப் படிப்பதுண்டே. நவீனங்கள் என்றால் எனக்கு உயிர் ஆயிற்றே’ என்றார் நண்பர். ‘ஆர்க் நகர ஜோனைத் தொடர்ந்து படித்து வருகிறீர்களா!’ என்றார் ட்வெய்ன். ‘ஆமாம். அதில் ஒரு சொல்லைக் கூட விடுவதில்லையே’ என பதிலிறுத்தார் நண்பர். ‘அப்படியா! அதுபற்றி என்ன நினைக்கிறீர்கள் நீங்கள்!’ என வினவினார் ட்வெய்ன்.

‘நீங்கள் என்னிடமே இப்படி கேட்கக் கூடாது ட்வெய்ன்’ என்றார் நண்பர். மார்க் ட்வெய்ன் திகைத்தார், ‘அப்படி என்ன தவறாகக் கேட்டு விட்டோம்’ என்று. எனினும் சமாளித்துக் கொண்டு ‘ஏன் அப்படிக் கேட்கக் கூடாது என்கிறீர்கள்?’ என்று கேட்டார் ட்வெய்ன். ‘ஏனா? அந்தப் பொத்தல் நவீனத்தை எழுதியவன் நான்தான். அதனை மறைக்கத்தான் நானும் முயன்று கொண்டிருக்கிறேன், முடியவில்லை’ என்றார் நண்பர் அலுப்புடன். மார்க் ட்வெய்னுக்கு மயக்கம் போடாததுதான் பாக்கி.

## தந்தையின் கண்டிப்பு

எட்வர்ட் இளவரசர் அப்பொழுது ஒரு கப்பற்படையில் சேர்ந்து பணியாற்றிக் கொண்டிருந்தார். அவர் பணியாற்றிக் கொண்டிருந்த கப்பலுக்கு ஒரு நாள் ஜார்ஜ் மன்னர் அறிவிப்பில்லாமலே வந்து விட்டார். மன்னர் வந்த செய்தி கணத்தில் பரவி விட்டது கப்பல் முழுவதும். வெண்கலப்

பட்டையொன்றிற்கு மெருகேற்றும் வேலையில் ஈடுபட்டிருந்த இளவரசர் தந்தையார் வந்திருக்கிறார் என்றறிந்ததும் போட்டது போட்டபடி போட்டு விட்டு, கைகளைக் கூடத் துடைத்துக் கொள்ளாமல் ஓடி வந்தார். வந்த புதல்வரைத் தந்தையார் ஏறிட்டுப் பார்த்தார். அவர் கேட்ட முதல் கேள்வி, 'மேலதிகாரியின் அனுமதி பெற்று வந்தாயா ?' என்பதுதான்.

புதல்வர் திருதிருவென விழித்தார். அவர் மௌனமே சொல்லி விட்டது, அவர் அனுமதி பெற்று வரவில்லை என்று. தந்தையின் கண்கள் சிவந்தன. 'போ, போய் அனுமதி பெற்றுக் கொண்டு வா !' என்று ஓர் அதட்டு அதட்டினாரே பார்க்கலாம். என்ன செய்வார் பிள்ளை ? பேசாமல் திரும்பிச் சென்றார்.

## சிறந்த வாழ்வு

சிறந்த பிரஞ்சுக் கதாசிரியர்களுள் ஒருவர் பால்ஸாக். அவருக்கு ஒரு மாமா இருந்தார். தாம் இறக்கும் போது பால்ஸாக்கிற்கு ஒரு நல்ல தொகை வைத்து விட்டுப் போனார். இந்த நல்ல செய்தியைத் தம் நண்பர்களுக்குக் குறிப்பிட பால்ஸாக் எழுதியது இதுதான்: 'நேற்றுக் காலை ஐந்து மணிக்கு என் மாமாவும், நானும் முன்பிருந்ததை விடச் சிறந்த வாழ்வடைந்தோம்.'

## மன்னரின் துணிச்சல்

டென்மார்க் மன்னர் கிரிஸ்டியன் தம் அலுவலகக் கட்டடம் ஒன்றில் நாஜிக் கொடியொன்று பறந்து கொண்டிருப்பதைக் கண்டார். உடனே அங்கிருந்த ஜெர்மன் அதிகாரியிடம் டென்மார்க்கும் ஜெர்மனியும் செய்து கொண்ட ஒப்பந்தத்திற்கு இது விரோதமானது என்று கூறினார் மன்னர். பெர்லினிலிருந்து வந்த உத்தரவின்படியே அந்தக் கொடி பறக்கவிடப்பட்டிருக்கிறது என்றார் அந்த அதிகாரி.

மன்னருக்குக் கோபம் வந்து விட்டது. '12 மணிக்கு முன் கொடி அகற்றப்படாவிட்டால் நான் ஒரு வீரனை அனுப்புவேன்' என்று கூறினார்.

பன்னிரண்டு ஆக ஐந்து நிமிடம் இருக்கும் வரை கூடக் கொடி அகற்றப்படவில்லை. 'நான் வீரனை அனுப்பப் போகிறேன்' என்றார் அரசர். 'வீரன் சுட்டுத் தள்ளப்படுவான்' என்றார் ஜெர்மன் அதிகாரி மிடுக்குடன். 'நான்தான் அந்த வீரன்' என்றார் மன்னர். மறுகணம் கொடியை அகற்ற உத்தரவிட்டார் அந்த ஜெர்மன் அதிகாரி.

## டிவேலராவின் தந்திரம்

ஐரிஸ் தலைவரான எமன் டிவேலரா மிகவும் தந்திரக்காரர். அரசியல் தந்திரத்தில் அவருக்கு இணையானவர்கள் மிகவும் குறைவென்றுதான் கூற வேண்டும். அவர் எப்படி தம் நண்பர்களையெல்லாம் இப்படி மடக்கி விடுகிறார் என்று ஒருவர் டிவேலராவின் நண்பரிடம் கேட்ட போது அதனை விளக்க அவர் ஒரு கதையையே கூறத் துவங்கி விட்டார்.

டாமினிகன் மதத்தைச் சேர்ந்த ஒருவரும், ஜெஸுய்ட் பிரிவைச் சேர்ந்த ஒருவரும் உலவச் செல்லும்போது புகை பிடித்துக் கொண்டு செல்ல விரும்பினார்கள். ஆனால் அப்படி செய்வது சரியா என்று இருவருக்கும் ஒரு சந்தேகம். 'மத குருவிடம் கேட்டு விடுவது' என்று இருவரும் தீர்மானித்தனர். டாமினிகன், 'இதோ கேட்டு வருகிறேன்' என்று உள்ளே போனார். போனவர் திரும்பி வரும்போது ஜெஸுய்ட் ஆனந்தமாகப் புகைத்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அவருக்குக் கடுமையான சினம். 'எனக்கு மத குரு மறுத்து விட்டாரே ? நீர் மட்டும் எப்படிப் புகைக்கலாம் ?' என்று கேட்டார்.

'நீர் என்ன கேட்டீர் ?' என்று விசாரித்தார் ஜெஸுய்ட்.

'தியானம் செய்யும்போது புகை பிடிக்கலாமா என்று கேட்டேன்' என்றார் டாமினிகன். 'ஓ அப்படியா?' என்று கூறி விட்டு, 'நான் அப்படிக் கேட்கவில்லை. புகை பிடிக்கும்போது தியானம் செய்யலாமா என்று கேட்டேன், அனுமதி கிடைத்து விட்டது' என்றார் ஜெஸுயிட். 'இதுதான் டிவேலராவின் முறை' என்றார் டிவேலராவின் நண்பர்.

## மனைவிக்குப் பாராட்டு

பாஸ்வெல்லுக்குத் தம் நண்பர் ஒருவர் மறுமணம் செய்து கொள்ளப் போகும் செய்தி தெரிய வந்தது. உடனே அவரைச் சென்று கண்டு கண்டித்தார் பாஸ்வெல். 'ஏன் இப்படிப் போயிற்று உங்கள் புத்தி? நீங்கள் மறுமணம் செய்வது உங்களின் முதல் மனைவியை அவமதிப்பது போலாகாதா?' என்று கேட்டார் பாஸ்வெல். நண்பர் என்ன பதில் சொன்னாரோ தெரியவில்லை.

பாஸ்வெல் தாம் சென்று கூறியதை ஜான்ஸனிடம் எடுத்துச் சொன்னார். அதற்கு ஜான்ஸன் சொன்னார்: 'நீர் கூறியது சரியல்ல. உம் நண்பர் மறுமணம் செய்து கொள்ளாவிட்டால்தான் அவர் தம் முதல் மனைவியை அகௌரவித்ததாகும் என்பேன் நான். அவள், அவர் மண வாழ்க்கையையே திரும்பவும் நினைக்காத அளவுக்கு நடந்து கொண்டிருக்கிறாள் என்றுதான் ஏற்படும் அதிலிருந்து. மற்றொன்று அவர் மறுமணம் செய்து கொள்வது அவர் தம் முதல் மனைவியைப் பாராட்டுவதாகும். எப்படி என்று கேட்கலாம். அவள், அவர் இரண்டாம் முறையும் ஒரு கணவனாக இருக்க விரும்பும் அளவுக்கு அல்லவா அவருக்கு இன்பமூட்டியிருக்கிறாள்.' பாஸ்வெல் பதிலே சொல்லவில்லை டாக்டர் ஜான்ஸனின் கூற்றைக் கேட்டதும்.

## ஒவியமும், கவிதையும்

விஷ்லர் என்பார் ஓர் ஓவிய நிபுணர். அத்துடன் ஒரு மேதையும் கூட. ஒரு முறை அவர் ரோஸெட்டி என்பார் வரைந்து கொண்டிருந்த ஓவியம் ஒன்றைப் பார்த்துப் பாராட்டினார். பிறகு ஒரு நாள் ரோஸெட்டியைப் பார்த்தபோது, 'ஓவியம் எந்த அளவில் இருக்கிறது ?' என்று கேட்டார். 'முழுவதும் முடிந்து விட்டது. இப்பொழுது நான் 'பிரேம்' ஒன்றிற்கு ஆர்டர் கொடுத்திருக்கிறேன். அதைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்றார் ரோஸெட்டி.

பிறகு ஒரு நாள் விஷ்லர் அந்தப் படத்தைப் பார்த்தபோது அதற்கு மிகவும் அழகான 'பிரேம்' போடப்பட்டிருந்தது. 'நான் முன் தடவைப் பார்த்த பிறகு நீங்கள் ஒன்றுமே செய்யவில்லை, இல்லையா ?' என்று கேட்டார் விஷ்லர்.

'இல்லை இல்லை' என்று கூறி ஒப்புக் கொண்டார். 'ஆனால், அதைப் பற்றி நான் ஒரு கவிதை எழுதியிருக்கிறேன்.' சொன்னதுடன் நில்லாமல் அதனைப் படித்தும் காட்டினார் ரோஸெட்டி. உண்மையிலேயே கவிதை மிகவும் அழகாக இருந்தது. 'அந்தப் படத்தை எடுத்து விட்டு இந்தக் கவிதைக்குப் போடுங்கள் அந்தப் பிரேமை' என்றார் விஷ்லர்.

## இஸ்ரேல் குடியேற்ற நாட்டு மந்திரி

இஸ்ரேலியப் பிரதம மந்திரி பென்குரியனை அவருடைய நெடுநாளைய நண்பர் ஒருவர் பார்க்க வந்தார். பென்குரியனும் வந்தவரை வரவேற்றுப் பேசிக் கொண்டிருந்தார். பேச்சிற்கிடையில் நண்பர் தாம் யூத இயக்கத்திற்கு ஆற்றிய தொண்டுகளையெல்லாம் விவரித்து விட்டுத் தம் பணியைக் கௌரவித்தாற்போல் தமக்கு ஒரு பதவி வேண்டுமென்று கூறினார்.

'என்ன பதவி வேண்டும்?' என்று கேட்டார் பென்குரியன். 'ஒரு மந்திரி பதவி போட்டுக் கொடுங்கள்' என்றார் நண்பர். 'நிரம்பச் சரி, உம்மைக் குடியேற்ற நாட்டுக்கு மந்திரியாக்கி விடுகிறேன்' என பதிலிறுத்தார் பென்குரியன்.

'என்ன, குடியேற்ற நாட்டு மந்திரியாகவா? கிழவன் என்பதற்காகத்தானே என்னைக் கேலி செய்கிறீர்கள். இஸ்ரேலுக்குக் குடியேற்ற நாடு ஏது? எந்த குடியேற்ற நாட்டுக்கு நான் மந்திரியாயிருப்பது?' ஏமாற்றத்துடன் கேட்டார் நண்பர். 'கோபப்படாதீர். உமக்குத்தான் தெரியுமே! நான் கப்ளானை நிதி மந்திரியாய் நியமித்தபோது அவர் இப்படியா கோபப்பட்டார்' என்று கேட்டார் பென்குரியன். நண்பர் விழித்தார்.

## தியோடர் ரூஸ்வெல்டின் பதில்

அமெரிக்க ஜனாதிபதிக்கான தேர்தல் 1912 -ல் நடந்தது. அதில் தியோடர் ரூஸ்வெல்ட்டும் போட்டியிட்டார். குடியரசுக்காரர்கள் நிரம்பிய கூட்டமொன்றில் அவர் பேசும்போது ஜனநாயகக் கட்சியின் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் வன்மையாகக் கண்டித்தார். அவர் தம் பேச்சை முடிக்கப் போகும் சமயத்தில் ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஒருவர் எழுந்து தியோடர் ரூஸ்வெல்ட் கூறிய குற்றச்சாட்டுகளை மறுத்து விட்டு, 'மிஸ்டர் ரூஸ்வெல்ட் ஏன் நீங்கள் ஒரு குடியரசுக் கட்சிக்காரராக இருக்கிறீர்கள்?' என்று கேட்டார். உடனே ரூஸ்வெல்ட், 'என் அப்பனும், பாட்டனும் அந்தக் கட்சியிலிருந்ததனால்' என்றார்.

'உங்கள் அப்பனும், பாட்டனும் குதிரைத் திருடர்களாயிருந்தால் நீங்கள் யாராக இருப்பீர்கள்?' என்று கேட்டார் ஜனநாயகக் கட்சிக்காரர். 'அப்பொழுது நிச்சயமாக ஜனநாயகக் கட்சிக்கார னாயிருப்பேன்' என்று பதிலளித்து விட்டு அமர்ந்தார் தியோடர் ரூஸ்வெல்ட்.